# நாடகமேடை நினைவுகள்

## ஆறாம் பாகம்

தமிழில்

ராவ் பஹதூர்

**ப. சம்பந்த முதலியார், பி. ஏ., பி. எல்.,**

அவர்களால் இயற்றப்பட்டது.

**இந்நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்றத் தமிழ் நூல்கள்:—**

லீலாவதி-சுலோசனை, சாரங்கதரன், மகபதி, காதலர் கண்கள், நற்குல தெய்வம், மனோஹரன், ஊர்வசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம், கள்வர் தலைவன், தாசிப்பெண், மெய்க்காதல், பொன் விலங்குகள், சிம்ஹளநாதன், விரும்பிய விதமே, சிறுத்தொண்டர், காலவரிஷி, ரஜபுத்ரவீரன், உண்மையான சகோதரன், சதி-சுலோசனா, புஷ்பவல்லி, கீதமஞ்சரி, உத்தமபத்தினி, அமலாதித்யன், சபாபதி முதற்பாகம் பொங்கல் பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றாம் பாகம், சபாபதி நான்காம் பாகம், வள்ளிமணம், பேயல்ல பெண்மணியே, புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனா, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத்மாக்கள், சாஜன், ஜெனரல் விதித்த மருந்து, மாளவிகாக்னிமித்ரம், விபரீதமான முடிவு, சுல்தான்பேட்டை சப் அசிஸ்டென்ட் மாஜிஸ்டிரேட், சகுந்தலை, காளப்பன் கள்ளத்தனம், விக்ரமோர்வசி, முற்பகற் செய்யின் பிற்பகல் விளையும், நாடகமேடை நினைவுகள் முதற்பாகம், இரண்டாம் பாகம், மூன்றாம் பாகம், நான்காம் பாகம், ஐந்தாம் பாகம், நாடகத் தமிழ், யயாதி, பிராம்மணனும் சூத்திரனும், வாணீபுர வணிகன், இரண்டு நண்பர்கள், சத்ருஜித், ஹரிச்சந்திரன், மார்க்கண்டேயர், ரத்னாவளி, கண்டு பிடித்தல், கோனேரி அரசகுமாரன், சந்தையிற் கூட்டம், வைகுண்ட வைத்தியர், தீட்சிதர் கதைகள், ஹாஸ்யக் கதைகள், குறமகள், நல்லதங்காள், சிறுகதைகள், நடிப்புக்கலையில் தேர்ச்சிபெறுவ தெப்படி?, ஹாஸ்ய வியாசங்கள், பேசும் படக்காக்ஷி, விடுதிப் புஷ்பங்கள், முதலியன.

முதற் பதிப்பு

சென்னை 'பியர்லெஸ்' அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது.



1938

[விலை

INSCRIBED

TO

THE BELOVED MEMORY

OF

MY PARENTS

P. VIJIARANGA MUDALIAR

AND

P. MANICKAVELU AMMAL

AND

MY FRIEND

C. RANGAVADIVELU

# நாடகமேடை நினைவுகள்

## ஆறாம் பாகம்

1929 வருஷம் கடைசியில், நான் சுகுண விலாச சபை ஸ்தாபித்தது முதல் செய்யாத காரியம் ஒன்றைச் செய்தேன்—அதாவது நான் மதுரை டிராமாடிக் கிளப்பில் நாடகமாடினேன்! இதற்குக் காரணம் நான் சற்று விவரமாய்த் தெரிவிக்க வேண்டியவனாயிருக்கிறேன். நான் முன்பே எனது நண்பர்களுக்குத் தெரிவித்தபடி, எனது அத்யந்த நண்பரான கே. நாகரத்னம் ஐயர், உத்யோக சம்பந்தமாக மதுரைக்கு மாற்றப்பட்டார். அதன் பேரில் அவர் எங்கள் சபை நாடகங்களில் சென்னையில் நடிப்பது கஷ்டமாயிற்று; அவர் நடிக்காமலிருக்கவே நானும் நடிப்பது அசாத்தியமாயிற்று. இதைப்பற்றி நான் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும்போது, ஒருநாள் நாகரத்னம் ஐயரிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது; அதில் மதுரையில் இருக்கும் டிராமாடிக் கிளப்பார், தன்னையும் என்னையும் அவர்கள் கிளப் நடத்தும் நாடகங்களிரண்டில் ஆடும்படியாகக் கேட்கிறதாகவும், போய்வர என் ரெயில் சிலவெல்லாம் அவர்கள் கொடுப்பார்களென்றும், இதற்கு எப்படியாவது நான் சம்மதிக்கவேண்டும் என்று கேட்டிருந்தார். இதைப் பார்த்தவுடன் இன்ன பதில் அனுப்புவதென்று தெரியாமல் திகைத்தேன். ஒரு புறம் எனது அத்யந்த நண்பருடன் மறுபடியும் நாடகமேடையில் ஆட வேண்டுமென்னும் விருப்பம், மற்றொரு புறம், சுகுண விலாச சபையைத் தவிர மற்ற சபையொன்றில் எப்படி நான் ஆடுவது? முன் பின் தெரியாத மற்ற ஆக்டர்களுடன் எப்படி நான் ஆடுவது? இது எங்கள் சபைக்கு விரோதமாமா? என்று பலவாறு, கலக்கப்பட்டவனாய், என் சந்தேகங்களையெல்லாம் எனது அத்யந்த நண்பருக்குத் தெரிவித்தேன். அதன் பேரில் அவர் “இன்னும் நீங்கள் எத்தனை வருடம் நாடகமேடையில் ஆடப்போகிறீர்கள்? நீங்கள் நாடக மேடையை விட்டு நீங்கினால் நானும் அதைவிட்டு நீங்கப்

போகிறேன் ; ஆகையால் என் பொருட்டாவது இதற்குச் சம்மதிக்க வேண்டும்" என்று பதில் எழுதினார். இந்தக் கடைசி நியாயத்திற்கு பதில் சொல்ல முடியாதவனாய், நான் அப்படியே ஆகட்டும் என்று சம்மதித்தேன். அதன்படி மதுரைக்குப்போய் ஆடுவதற்கு முன்பாக எங்கள் சபையின் நிர்வாக சபையாருக்கு இதையெல்லாம் தெரிவித்து, மதுரை டிராமாடிக் கிளப்பில் நானும் எனது அத்யந்த நண்பரான நாகரத்தினம் ஐயரும் ஆட, உத்திரவைப் பெற்றே, பிறகு மதுரைக்குப் போனேன். நான் இதற்கு உத்திரவைக்கேட்ட பொழுது, நிர்வாக சபையார் உத்திரவைக் கொடுத்த போதிலும், அரைமனதுடனேயே கொடுத்தார்கள் என்பதை நான் அறிவேன். அவர்களிடம் நான் அங்கு சென்று நடிக்கவேண்டும் என்கிற தீர்மானத்திற்கு வந்த காரணத்தை ஸ்பஷ்டமாய் ஒன்றும் ஒளியாது தெரிவித்தேன். "எனக்கோ வயதாகிறது. நான் இன்னும் சில வருடங்கள் தான் நாடகமேடையில் ஆடமுடியும், நான் நாடகமேடையை விட்டு நீங்கினால், தானும் அதன் பிறகு ஆடப் போகிறதில்லை என்று நாகரத்தினம் ஐயர் சொல்லுகிறார். ஆகவே அவர் இன்னும் எத்தனை முறை ஆடமுடியுமோ அதற்கு நான் உதவவேண்டியது என் கடமையாகும்; அன்றியும் இதனால், நமது சபைக்கு ஒன்றும் கெடுதியில்லை. சென்னையில் நாங்கள் வேறு சபையில் ஆடினால் தவறாகும், வெளியூரில் ஆடினால் அதனால் குற்றமில்லை; அன்றியும் நமது சபையார், வெளியூர்களிற் போய் ஆடுகிற வழக்கத்தை விட்டு விட்டிருக்கின்றனர். ஆகவே வெளியூர்களில் நாங்கள் ஆடுவதினால் நமது சபைக்கு நஷ்டமில்லை. மேலும் தமிழ் நாடக மேடையை புனருத்தாரணம் கொண்டு வரவேண்டுமென்பது நமது சபையின் முக்கியமான கொள்கைகளில் ஒன்றல்லவா ? ஆகவே, நமது சபையைப் போன்ற மற்ற சபைகளுக்கு நம்மாலானதை உதவி செய்யவேண்டியது நமது கடமை தானே" என்று அவர்களுக்கு சமாதானம் சொன்னேன். என்ன சொல்லியும் அவர்களில் அநேகர் திருப்தி அடையவில்லை; உண்மையைக் கூறுமிடத்து, எனக்கும் கடைசி வரையில், இவ்வாறு நாம் மற்றொரு சபையில் நடிப்பது நியாயமா, தவறா, என்கிற சங்கை பாதித்துக் கொண்டிருந்தது. தமிழ்ச் சங்கங்களிருந்த மதுரைமா நகர் மீதும், அங்கு திருக்

கோயில் கொண்டிருக்கும் மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயத்தின்
மீதும் எனக்குள்ள பிரீதியை முன்பே இதை வாசிக்கும் எனது நண்
பர்களுக்குத் தெரிவித்திருக்கிறேன். ஆகவே கடைசியாக, நாம் இப்
படிச் செய்வது நமது சுய நன்மைக்காக ஒன்றுமில்லை, நம்முடைய
சிநேகிதர் மனதைத் திருப்தி செய்வதற்காகவும், தமிழ் நாடக
மேடைக்கு நாம் செலுத்த வேண்டிய கடமைக்காகவும்தானே
இப்படி செய்கிறோம்; ஆகவே மீனாட்சி சுந்தரேஸ்வரர் பாரம்,
என்று அவர்கள் தலையில் இதைச் சுமத்தி, மதுரைக்குப் புறப்பட்டு
நாடக தினத்திற்கு நான் ஐந்து நாள் முன்பாகப் போய்ச் சேர்ந்
தேன். மதுரை டிராமாடிக் கிளப்பார், இங்கு "காலவரிஷி",
"இரண்டு நண்பர்கள்" என்னும் இரண்டு நாடகங்களையும் ஆட
வேண்டுமென்று நாகரத்தினம் ஐயருடன் கலந்து பேசித் தீர்
மானித்தார்கள்; அதற்கு நானும் சரிதான் என்று சம்மதித்தேன்.

மதுரைக்குப் போய்ச் சேருமளவும், புதிய ஆக்டர்களுடன்
சேர்ந்து நடிக்கிறோமே, அவர்கள் எல்லாம் சரியாக நடிப்பார்களா?
நம்முடன் ஒத்து உழைப்பார்களா? நாடகங்கள் சரியாக நடிக்கப்
பட்டு ஜனங்களை சந்தோஷிக்கச் செய்யுமா? நாடகமாடுவதில்
நானும் எனது நண்பர் கே. நாகரத்தினம் ஐயரும் இதுவரையில்
எடுத்திருந்த சிறிது பெயர் கெடாமலிருக்குமா? நாடகங்களுக்கு
சரியாக பணம் வசூலாகுமா?'; என்கிற பல சந்தேகங்கள் என்
மனதைப் பாதித்தன. முக்கியமாக அவற்றுள் கடைசியாக எழுதிய
சந்தேகம்தான் என்னை மிகவும் வாட்டியது; இந்நாடகங்களினால்
மதுரை டிராமாடிக் கிளப்பாருக்கு, நஷ்டம் நேரிட்டால், ஏதோ
கொஞ்சம் பெயர் பெற்ற ஆக்டர்களென்று இவர்களை வரவழைத்
தோமே, இவர்களால் நமக்கு நஷ்டம் நேரிட்டதே, என்று அவர்
களும் வருத்தப் படக்கூடாது; சென்னையிலுள்ள எனது நண்
பர்களும் இங்கிருந்து அவ்வளவு தூரம் போய் ஆக்டு செய்தார்
களே என்ன பிரயோஜனம் என்று ஏளனம் செய்யக்கூடாது,
என்பதுதான் ஜகதீசனுக்கு என் முக்கியப் பிரார்த்தனையாயிருந்தது.
மதுரை ஸ்டேஷனுக்கு நான் போய் இறங்கியவுடன், மா. சுப்பிர
மணிய ஐயரை முன்னிட்டு என்னை வரவேற்ற புதிய நண்பர்களின்
பிரீதியானது அந்த சந்தேகங்களில் கால்பங்கை நிவர்த்தி செய்

தது ; அன்று சாயங்காலம், டிராமாடிக் கிளப்பார் இருப்பிடமாகிய விக்டோரியா எட்வர்ட் ஹாலு (Victoria Edward Hall) க்குப் போய் நான் மற்ற ஆக்டர்களைச சந்தித்த பொழுது, இன்னும் கால் பங்கு தீர்ந்தது; இவ்விடத்தில் நாங்கள ஆடிய முதல் நாடகமாகிய "காலவரிஷி!" நாடகத்திற்கு ஆரம்பத்தில் தெய்வ ஸ்தோத் திரம் செய்தவுடன், மற்றுமுள்ள அரைப்பங்கு சந்தேகமும் அறவே நீங்கியது.

நான்கு நாள் முன்னதாகப் போய்ச சேர்ந்தபடியால், அந்த நான்கு தினமும், எனது புதிய நண்பர்களுடன் இரண்டு நாடகங் களுக்கும் ஒத்திகை நடத்தினேன். எனது புதிய நண்பர்களாகிய இந்த டிராமாடிக் கிளப் ஆக்டர்கள் மிகவும் உற்சாகத்துடன் ஒத்தி கைகளுக்கு வந்து கற்று வந்தனர். நன்றுய் நடிக்க வேண்டு மென்னும் அவர்களுக்கிருந்த ஊக்கமானது, அவர்களுக்கு நன்றுய்க் கற்பிக்கவேண்டுமென்னும் உற்சாகத்தை எனக்குத் தந்தது. சுகுண விலாச சபை ஆரம்பித்த பொழுது என்ன உற்சாகத்துடன் ஒத்தி கைகள் நடத்தினேனே அத்தனை உற்சாகத்துடன் இங்கும் நடத்தி னேன் என்றே சொல்லவேண்டும் இந்த ஒத்திகைகளை நடத்திய இடமாகிய விக்டோரியா எட்வர்ட் ஹால மேல் மாடியானது, மிகவும் விசாலமான தாயிருந்தபோதிலும், ஒரு கஷ்டம் மாத்திர மிருந்தது. இக் கட்டடத்தின் கீழே சாயங்காலங்களில் ஒரு சினிமா நடந்தேறி வருகிறது ; சினிமா ஆரம்பமாகு முன்னும், இடைக்காலங்களிலும், அதைப்பார்க்க வரும் பாமர ஜனங்கள், பெருங் கூச்சலிடுகின்றனர் ; இதனால நிம்மதியாக ஒத்திகை நடத் துவது கஷ்டமாயிருந்தது. தற்காலத்திலும் இக்கஷ்டம இருக் கின்றது.

அக்காலம் இந்த கிளப்பில் கண்டக்டராயிருந்த ஸ்ரீமான் தாதாசாரியார் அவர்கள் அனுமதியின் பேரில் நான் அவருக்குப் பதிலாக ஒத்திகைகள் நடத்தினேன். முன் பின் தெரியாத புதிய ஆக்டர்களுக்குச் சொல்லிக் கொடுப்பதென்றால், முதலில கொஞ்சம் சங்கோசமாயிருந்த போதிலும், அவர்களுக்கு என்னிட மிருந்த பிரீதியானது, அதை சீக்கிரத்தில் ஒழித்து விட்டது. இரண்டொரு

நாளுக்குள், என் பழய நண்பர்களுடன் நான் குலாவுவது போல் அவர்களுடன் குலாவ ஆரம்பித்தேன். ஒத்திகைகளை யெல்லாம் முடித்த பொழுது, என் மனதில் திர்ப்தியடைந்தபோதிலும் நாடகங்கள் எப்படியிருக்குமோ என்னும் பயம் மாத்திரம் என்னை விட்டகல வில்லை.

இவ்வருஷம் டிசம்பர் மாசம் 18ஆம் தேதி இரவு 9-30 மணிக்கு மதுரை பெரிய தகரக் கொட்டகையில், "காலவரிஷி" என்னும் எனது நாடகம் ஆடப்பட்டது. இந்நாடகமானது, வேறொரு சபையில நான் முதல் முதல் நடித்த நாடகமானபடியாலும், இதன் பிறகு இசசபையின் அங்கத்தினராகச் சேர்ந்து பல நாடகங்களை நான் இது வரையில் நடித்திருக்கிறபடியாலும், இந்த நாடகங்களைப பற்றியும், இசசபையின் ஆக்டர்களைப்பற்றியும், என் அபிப்பிராயத்தை சற்று விவரமாய் எழுத விரும்புகிறேன்.

நாடக ஆரம்பம் இரவு 9½ மணிக்கு என்று பிரசுரிக்கப்பட்டிருந்தபோதிலும், ஏறக்குறைய 9 மணிக்கெல்லாம், நாடக கொட்டகையில ஏராளமான ஜனங்கள் வந்து சேர்ந்தனர். என் வழக்கப்படி நான் அவர்களை நேரிற் பார்க்காமற போனபோதிலும், அவர்களுடைய ஆரவாரத்தால இதை நான் உணாந்தேன். இந் நாடகத்தில, அர்ஜுனனாக வரும் நான், கடைசி இரண்டு காட்சிகளில் தான் ஆக்ட் செய்யவேண்டியவனாயிருக்கிறேன், நான் மேடையின் மீது தோன்றிய பத்து அல்லது பதினைந்து நிமிஷங்களுக்கெல்லாம் நாடகமானது முற்று பெறும்! ஆயினும் என் வழக்கத்தின்படி சாயங்காலம் ஐந்து மணிக்கெல்லாம் கொட்டகைக்குப் போய், வேடம் பூண்டேன். அன்று முதல் இன்று வரையில் மதுரையில நான் இந்த கிளபபில் நடிக்கும் பொழுதெல்லாம், எனக்கு வர்ணம் தீட்டியவர், இங்கு எனக்குப புதிய நண்பராய் வாய்ந்த பி.கிருஷ்ணசாமி சாஸ்திரியார், பி. ஏ., பி. எல்., அவர்களே. இவர் என்னைப் போல் ஏறக்குறைய வயோதிகராயிருந்தபோதிலும், இச்சபைக்கு இவ்வருடம் காரியதரிசியாயிருந்த போதிலும், சாயங்காலம் ஆக்டர்கள் எல்லாம் வருவதன் முன்பே கொட்டகைக்குப் போய்ச் சேர்ந்து, சுமார் 5 மணி முதல 9 மணி வரையில் தான் ஒருவராக எல்லா ஆக்டர்களுக்கும் வர்ணம் தீட்டுவார். தன்னிலும் வயோ

திகனான என்னை யௌவனமுடைய "ஆணில் அழகனான அர்ஜு னனாக" த் தோன்றும் படியாக, இவர் எடுத்துக் கொண்ட கஷ் டம் கொஞ்சமல்ல; அன்று முதல் இன்று வரை சுமார் பத்து நாடகங்களுக்கு இவ்வாறு எனக்கு மிகவும் சிரமம் எடுத்துக் கொண்டு, வர்ணம் தீட்டிய சாஸ்திரியார் அவர்களுக்கு, இதன் மூல மாக என்மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துவது தவிர, வேறு கைம்மாறு செய்ய வகையறியேன். எனது நண்பர் நாகரத்தினம் ஐயர் மாத்திரம், ரங்கவடிவேலுவைப் போல் தானாக வேஷம் பூணக் கற்றுக்கொண்டிருக்கின்றனர். நாற்பத்தாறு வருடங்களாக தமிழ் நாடக மேடையில் ஆடி வந்தும், முகத்தில் வர்ணம் தீட்டிக் கொள்ள, வகையறியாது, கல்பிள்ளையாரைப் போல் உட்கார்ந்து கொண்டு, மற்றவர்கள் எனக்கு வேஷம பூணுவதில் எல்லா வேலை யையும் செய்யும் படிச் செய்கிறதை நினைக்கும் பொழுது, எனக்கு மிகவும் வெட்கமாய்த்தானிருக்கிறது. இதற்கு முக்கியமாக கார ணம் எனக்கு இயற்கையாயுள்ள சோம்பேறித்தனம் தான் என்று நினைக்கிறேன்.

எல்லா ஆக்டர்களும் சித்தமானவுடன், மணிப்பிரகாரம் நாட கத்தை ஆரம்பிக்க வேண்டுமென்று ஒன்பது மணிக்கெல்லாம் விநாயகர் துதி ஆரபிக்கவேண்டுமென்று என் புதிய நண்பர்களிடம் தெரிவித்தேன். அப்பொழுது அவர்கள் பிள்ளையார் பாட்டு என்று எங்கள் கிளப்பில் வழக்கமில்லை, ராஜராஜேஸ்வரியான அம்பிகை தோத்திரத்தைத்தான் நாங்கள் ஆரம்பப பாட்டாக பாடுவது வழக் கம் என்று தெரிவித்தனர். அதன் பேரில் எனது நண்பர் நாகரத் தினம் ஐயரை ஒரு புறமாக வரவழைத்து, இவர்களுக்கு வழக்க மில்லாமற் போனாற் போகிறது, நமது வழக்கப்படி, பிள்ளையார் பாட்டை நமது மனதிற்குள்ளாவது பாடி விட்டு ஆரம்பிப்போம் என்று சொல்லி அவ்வாறே செய்தோம். இச்சபையின் அங்கத்தி னனாகச் சேர்ந்த பிறகு ஏறக்குறைய இரண்டு வருடங்கள் பொறுத்துதான் இவர்களைப் பிள்ளையார் பாடல் ஒன்று பாடும் வழக்கத்திற்குக் கொண்டு வந்தேன்.

மேற் சொன்னபடி ஸ்தோத்திரப் பாடல்களானதும், நான் எனது நாடக ஆடையை அணிய ரங்கததின் பின்புறம் செல்ல

முதற் காட்சியில் நர்த்தனம் செய்யவேண்டியிருந்த கே. நாகரத்தினம் ஐயர் என்னிடம் வந்து, இங்கு புதிதாயிருக்கிறபடியால், நான் நர்த்தனம்செய்யும் பொழுது நீங்கள் பக்கப் படுதா (Side Wing) அருகிலிருந்தால் எனக்கு தைரியமும் உற்சாகமும் கொடுக்கும் என்று கேட்டுக்கொள்ள, அவ்வாறே அங்கு போய் உட்கார்ந்தேன். உடனே நாடக ஆரம்பத்திற்காக, மணியடித்து டிராப் படுதாவைத் தூக்கினவுடன், முதல் பாட்டை பாடவேண்டிய இந்திரன் வேடம் புனைந்த ஆக்டர், அபஸ்வரமாகப் பாட ஆரம்பித்தார்! இதென்னடா ஆரம்பத்திலேயே இப்படியிருக்கிறது என்று கொஞ்சம் பய முற்றேன். "முதல் கோணல் முற்றும் கோணல்" எனனும் பழமொழி யொன்றிருப்பினும், என் விஷயததில் முதலில் ஏதாவது கெடுதியாயிருந்தால் தான் பிறகு எல்லாம் சரியாக முடிகிற தென்பதை எண்ணினவனாய், மீனாட்சி சுந்தரேஸ்வரர் பாரம், என்று பொறுத்திருந்தேன். உடனே அக் காட்சியில் எனது அத்யந்த நண்பர் கே. நாகரத்தினம் ஐயர், நர்த்தனம் செய்யத் தொடங்கியது முதல் வந்திருந்த ஜனங்களெல்லாம், கரகோஷம் செய்து சந்தோஷிக்க ஆரம்பித்தனர். பிறகு சுபத்திரையாக வந்த கே. நாகரத்தினம் ஐயரும், இன்னும் மற்ற ஆக்டர்களும் மிகவும் நன்றாய் நடித்தனர் என்பது என் அபிப்பிராயம். இருந்தும் கடைசி காட்சிக்கு முன் காட்சியில் நான் ரங்கத்தில் பிரவேசிக்க வேண்டிய சமயம் வந்த பொழுது, என் உடலில் ஒரு விதமான பயம் தோன்றியது! "எட்டு வருஷத்து எருமைக் கடா!" என்று ஒரு பழமொழி யுண்டு, அப்படிபபட்ட கடாவின் வயது ஐந்து கொண்டதாகி, சுமார் நாற்பது வருஷம் ரங்கத்தில் ஆடிய பிறகும்; நமக்கு இந்த ரங்க பீதியா, என்று நகைத்தவனாய், மனதைத் தைரியம் செய்து கொண்டு, இபபடிப்பட்ட சமயங்களில் அதைப்போக்க நான் கைகண்ட ஔஷதமாய் வைத்திருக்கும், "பிராணயாமம்" (Deep breathing) என்பதை ஐந்தாறு முறை அப்யசித்து, ரங்கத்திற்குள் பிரவேசிக்கவேண்டியவனாயினேன். இதற்கு முக்கிய காரணம், இத்தனை வருடங்களாகியும், ஏதாவது புதிய நாடகத்தில முதன் முறை ஆடுவதென்றாலும், அல்லது புதிய ஆக்டர்களுடன் ஆடுவதென்றாலும், எப்படி யிருக்குமோ என்னும் பீதி, என்னைவிட்டு இன்னும் அகலாதிருப்பதே.

நான் மேடையில் தோன்றியதும் நிசப்தமாய் எல்லோரும் என்னைக் கவனிக்கிறார்கள் என்பதைக் கண்டவனாய், என்னாலியன்ற அளவு முயன்று நன்றாய் நடித்து சபையோரை சந்தோஷிப்பிக்கப் பார்த்தேன். நான் அன்று நடித்த அர்ஜுனன் பாகம் மிகவும் சிறியது, அதை சரியாக நடிக்காது ரசாபாசம் செய்வது சுலபம், அதில் பெயர் எடுப்பது கஷ்டம். இந்நாடகத்தில் அர்ஜுனன் தோன்றும் இரண்டு காட்சிகளில் முதற் காட்சியாகிய இதில், சுபத்திரை தன்னை வஞ்சித்து தன்னிடமிருந்து வரம் பெற்றாள் என்பதை அறிந்த அர்ஜுனன், தன முகத்தைத் திருபபி அவளைப பார்த்து "சுபத்திரை!" என்று கூறுமிடம், இதை நடிககும் ஆக்டர்களுக்கு ஒரு கட்டம். இந்த கட்டத்தில் தவறுவானாயின் அந்த ஆக்டர் ஒழிந்தவனே இந் நாடகத்தில்; பல ஆக்டர்கள், இந்த ஒரு பதத்தை சரியாக ஆக்டு செய்யத் தெரியாது ரசாபாசஞ் செய்ததைப பன் முறை நான் பார்த்திருக்கிறேன். இந்த கட்டம் வந்த பொழுது, கொட்டகையிலிருந்த ஜனங்களெல்லாம் ஒரே கரகோஷம் செய்த பொழுது, இந்த கட்டத்தில் நாம் தவறவில்லை என்று சந்தோஷப் பட்டுக்கொண்டேன். இந்த ஒரு வார்த்தையைக் கூறுமிடத்து, ஸ்ரீ கிருஷ்ணனுடன் போர்புரிய வேண்டுமே என்ற பயமுமிருக்க வேண்டும்; சுபத்திரை தன்னை சூது செய்து இதற்கு இணங்கச் செய்தாளே என்னும் கோபமுமிருக்கவேண்டும், அபபடிச் செய்தவள் தன் ஆருயிர்க் காதலியாகிய கண்ணன் தங்கை என்னும் பரிவும் இருக்கவேண்டும்! இம்மூன்று ரசங்களையும் ஒருங்கே முகத்திலும், வாய்ச சொல்லிலும் காட்டுவது தான் கடினம். இதை இந்த அர்ஜுனன் வேடம் பூணும் எனது இளைய நண்பர்கள் கவனிப்பார்களாக.

இனி அன்றைத்தினம் என்னுடன் ரங்கத்தின்மீது நடித்த எனது புதிய நண்பர்களைப் பற்றி கொஞ்சம் எழுதுகிறேன். "காலவரிஷி" என்னும் நாடகத்திற்கு தெலுங்கில் "சித்திரசேனோபாக்கியானம்" என்றே பெயர். இதன் கதாநாயகன், சித்திரசேனனே. அன்று இச் சித்திரசேனன் வேடம் பூண்டவர் எனது புதிய நண்பர் மா. சுப்பிரமணிய ஐயர் என்பவர், இதற்கு முன்பாக நான் மதுரைக்கு வந்திருந்தபொழுது இவர் என்னைக்கண்டு

என்னுடன் சம்பாஷித்திருப்பதாக இவர் எனக்குத் தெரிவித்திருக்கிறார் ; ஆயினும் அது நான் எவ்வளவு யோசித்துப் பார்த்த போதிலும் என் நினைவிற்குக் கொஞ்சமேனும் வரவில்லை. நான் இம்முறை மதுரைக்கு வந்த பொழுது, ரெயில வண்டியை விட்டிழிந்தது முதல, ஒருவருக்கொருவர் பரிசயமாகி, விரைவில் சிநேகிதர்களாகி விட்டோம். மதுரையில் எனக்குக் கிடைத்துள்ள ஆப்த மித்திரர்களில இவர் ஒரு முக்கியமானவர் என்றே நான் கூற வேண்டும். இவ்வளவு வெகு சீக்கிரம் நாங்கள் நண்பர்களாகி விட்டதற்குக் காரணம், எனக்கிருப்பது போல் இவருக்கு முள்ள “ தமிழ் நாடகப் பயித்தியமே!” இவர் மதுரையில் பிரபலமான வக்கீலாயிருந்து காலஞ் சென்ற மாது ஐயர் அவர்கள் இரண்டாவது குமாரர்; என்னைப போல் இள வயது முதல் தமிழ் நாடகமேடையின் மீதுள்ள பிரீதியால், அதில தன் காலத்தைப் பெரும்பாலும் கழித்தவர். இந்த மதுரை டிராமாடிக் கிளபபைச் சேருமுன் இரண்டொரு நாடக சபைகளில் நடித்திருக்கிறார் எனப் பிறகு அறிந்தேன். இவரிடம் நான் கண்ட ஒரு முக்கியமான குணம் என்னவென்றால், நாடகமேடையில் ஒருவன் என்னென்ன கற்கக் கூடுமோ அவ்வளவையும் கற்கவேண்டும் என்னும் ஊக்கமே. யாராவது ஒரு ஆக்டரிடமிருந்து ஏதாவது கற்கவேண்டுமென்றிருந்தால் ஐம்பதல்ல, நூறு மயிலாவது, தன் மோடார் வண்டியிற் போய்க் கற்று வருவார். என்னிடமிருந்து இவர் கற்கவேண்டியது அதிக மில்லாவிட்டாலும் என்னைச சந்திக்கும் போதெல்லாம் (இதன் பிறகு இதுவரையில் மதுரைக்கு ஏழெட்டு தரம் போயிருக்கிறேன்; அச்சமயங்களிலெல்லாம், ஒரு நாளாவது இவர் என்னைப் பாராத நாளில்லை) ஏதாவது என்னிடமிருந்து அறிய விரும்புவார். இப்படிப்பட்ட “ சிஷ்யர்கள் ”எனக்கு அதிகமாயிராதது ஒரு விதத்தில் நலமாம் ; இல்லாவிட்டால், எனக்கு உண்ணுவதற்கும் உறங்குவதற்கும் கூட அவகாச மிராமற் போம்!

இவர் கம்பீரமான உருவத்தையும் தோற்றத்தையும் உடையவர்; கண்கள் விசாலமாயும் சற்றுபெருத்தும் இருக்கும்; இதனால் இவருக்கு ஒரு கஷ்டமுண்டு ; “ திருடனை ராஜ முழி முழிக்கச் சொன்னால் என்ன செய்வான் ? ” என்பதற்கு நேர் விரோதமாக,

ராஜ விழியை யுடைய இவருக்கு, திருடனைப் போல் விழிப்பது கடினமாயிருக்கிறது. ஆக்டர்களுக்கிருக்கவேண்டிய முக்கியமான குணம் இவரிடம் ஒன்றுண்டு, ஏதாவது ஒன்றைச் சொல்லிக் கொடுப்பதென்றால், ஏறக்குறைய ஒரு முறைக்குமேல் சொல்லிக் கொடுக்க வேண்டியதில்லை; எவ்வளவு கஷ்டமான பாகமாயிருந்த போதிலும், இரண்டாம் முறைக்குமேல் சொல்லவேண்டிய நிமித்தியமில்லை. சங்கீதத்தில், முக்கியமாக இந்துஸ்தானி சங்கீதத்தில் நல்ல ராக ஞான முடையவர், ஹார்மோனியம், தபேலா, முதலிய பக்கவாத்தியங்களையும் வாசிக்கும் திறமுடையவர். இவர் இன்று சித்திரசேனனாக மிகவும் நன்றாய் நடித்தார் என்பது என் தீர்மானம். ஆயினும் மதுரைவாசிகள் இவரை அதிகமாக சிலாகிக்கவில்லை என்பது என் அபிப்பிராயம்; "உள்ளூர் மாடு உள்ளூரில் விலைபோகாது" என்னும் காரணத்தினாலோ? நான் அறியேன். இவரிடம் இன்னொரு அரியகுணம் என்னவென்றால், இவர் இச்சபையில் சாதாரணமாக முக்கிய "ராஜபார்ட்" ஆகடு செய்து வந்தபோதிலும் எந்த அற்பவேஷத்தைக் கொடுத்த போதிலும், எடுத்துக்கொண்டு, அதற்கிசைய வேஷம் தரித்து நடித்துவருவார்! இதைபபற்றி பிறகு நான் எழுத வேண்டிவரும்.

அன்று கதா நாயகியாகிய, சித்திரசேனன் மனைவியரில் மூத்தவளாகிய, சந்தியாவளி வேடம் பூண்டவர், எனது புதிய நண்பர்களில் ஒருவராகிய சோமநாத ஐயரே. நான் மதுரைக்குப் போய்ச சேர்ந்தவுடன் இவரைப்பற்றிதான் முதலில நான் விசாரித்தேன். "இரண்டு நண்பர்கள்" நாடகத்தில என்னுடன் சத்யவதியாக, யார் நடிக்கப் போகிறதென எனது நண்பர் நாகரத்தினத்தைக் கேட்டபோது, இவர்தான் என்று சோமநாத ஐயரைத் தெரிவித்தார். "சத்யவதி" நான் சிருஷ்டித்த ஸ்திரீ பாத்திரங்களில் ஒரு முக்கியமானதாம்; அந்த பாகத்தை நடிப்பது சுலபமல்ல; அன்றியும் என்னுடன் நடிப்பவர்கள் சரியாக இல்லாவிட்டால், என்னால் சரியாக நடிக்க முடியாது என்பதை இந்த நாடகமேடை நினைவுகளை வாசித்துவரும் எனது நண்பர்கள் இது வரையில் நன்றாய் அறிந்திருப்பார்கள். ஆகவே இவரைப்பற்றி நான் முதலில் விசாரிக்கவேண்டியதாயிற்று. இவர் உருவத்தில் என்னைவிட கொஞ்

சம் பருமனுயிருந்தபோதிலும், முகத்தில் ஸ்திரீகளுக்குரிய களையை யுடையவர்; நன்றாகப்பாடும் சக்தி வாய்ந்தவர்; அன்றியும் ஏதாவது சொல்லிக்கொடுத்தால் உடனே அதை கிரஹித்துக் கொள்ளும் சக்தி வாய்ந்தவர்; சுப்பிரமணிய ஐயரிடம் இருப்பதுபோல் இவரிடமும், நாடகக் கலையை நன்றாய்க் கற்கவேண்டுமென்னும் அவா வுண்டு, ஆகவே இவருக்கு நான் ஒத்திகை செய்வது சுலபமாயிருந்தது. இவர் 'காலவரிஷி' யில் சந்தியாவளியாக நன்றாய்ப் பாடி நடித்தார் என்பது என் அபிப்பிராயம்.

இந்நாடகத்தில ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாகம் ஒரு முக்கியமானதென்பதை அதை வாசித்த எனது நண்பர்கள் அனைவரும் அறிவார்கள். சாதாரணமாகவே ஸ்ரீ கிருஷ்ணன் வேஷம் பூணுதல எளிதல்ல, அதிலும் நான் எழுதியபடி ஆக்ட்செய்வது, இன்னும் கொஞ்சம் கஷ்டம். இந்த வேடத்தை எனது புதிய நண்பர்களில் ஒருவராகிய பஞ்நாத ஐயர் பி.ஏ.,பி.எல்., எடுத்துக் கொண்டு நன்றாய் நடித்தார். இவருக்கு இம்முறை அப்பாத்திரத்தை என் அபிப்பிராயப்படி நடிக்கும் விதம் கற்பிக்க, எனக்கு அவகாசமில்லாமற் போயிற்று. பிறகு இரசபையார் எனது "சுபத்திரார் ஜுனு" என்னும நாடகத்தை ஆடிய சமயம், இவருக்கு எனக்குத் தெரிந்தவரை ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாத்திரத்தை இவ்வாறு நடிக்க வேண்டுமென்று நான கறபிக்க, மிகவும் நன்றாக நடித்தார் என்பது, என்னுடைய அபிப்பிராயமாத்திரமன்று, எல்லோருடைய அபிப்பிராயமுமாம். ஸ்ரீ கிருஷ்ண பாத்திரத்தை அநேகர், அநேக சபைகளில் நடிக்க நான் பார்த்திருக்கிறேன். அநேக நாடக கம்பெனிகளிலும் பார்த்திருக்கிறேன்; ஆயினும் எனது நண்பராகிய அ. பஞ்சநாத ஐயரைப போல அக்கஷ்டமான பாத்திரத்தை மிகவும் பொருத்தமாக நடித்ததை நான் பார்த்ததில்லை யென்றே சொல்ல வேண்டும். இந்த வேடத்திற்குத் தக்க உருவமும் குரலும், சங்கீத ஞானமும் நடிக்கும திறமும் எல்லாம் இவரிடம் இயற்கையாய் அமைந்திருக்கின்றன.

இன்று இந்நாடகத்தில் நாரதராக வந்தது டாக்டர் பி. சி. சீதாராம் அய்யர்; இவருக்கு இவ்வேடம்பலவிதத்திலும் பொருந்தியதாயிருந்தது. நாரதர் உருவம் சற்று குறுகியதாயிருக்க

வேண்டுமென்று எப்பொழுதும் நான் எண்ணினவன்; இதற்கிசைந் தபடி எனது புதிய நண்பராகிய சீதாராமய்யர் என்னைவிட சற்று குட்டையானவர். இவர் சங்கீதத்தில் நல்ல ஞானமுடையவர். தனியாகக் கச்சேரி பண்ணும்படியான சக்தியும் உடையவர்; ஆயி னும் இவர் நாடக மேடைமீது வரும்பொழுது, இவரது பாட்டு கள் இவரது சங்கீதத்திறமைக் கேற்றபடி அவ்வளவு சோபிப்பதில்லை என்பது எனது அபிப்பிராயம்; எனது மதுரை நண்பர்களிற் பலரும் இப்படியே அபிப்பிராயப் படுவதாகத் தெரி விக்கின்றனர். இதற்கு முக்கிய காரணம், இவர் நாடக மேடையில் பாடும் பொழுது சங்கீதத்தின்மீதே மனதைச் செலுத்தி பாட்டிற்கு தக்கபடி நடிக்க வேண்டும் என்பதை அவ்வளவாக கவனிப்ப தில்லை யென்பதாயிருக்கலாமென என் புத்திக்குப் படுகிறது; இதை என் நண்பராகிய இவர் கொஞ்சம் கவனிப்பாராயின் நாடகமேடை யில் நல்ல பெயர் பெறுவார் என்பது என் அபிப்பிராயம்.

இந்நாடகத்தில் ஹாஸ்ய பாகத்திற்காக நான் எழுதிவைத்த 'மண்டு' 'கமண்டு' என்னும் இருபாத்திரங்களும் சற்று குண் டாக இருக்க வேண்டுமென்பது என் எண்ணம்; அதற்கிசைந்தபடி இச்சபையாரால் இந்நாடகத்தை நடத்திய பொழுது இந்த இரண்டு பாத்திரங்களுக்கும் மெலிவடைந்தவர்களாயிராத இருவர் கிடைத்ததே எனக்கே திர்பதியையும் நகைபையும் தந்தது.

ரத்னவளி வேடம், வக்கீலாகிய வெங்கடாசசாரியார் எடுத்துக் கொண்டார். இவர் இந்நாடகத்திற்கு வருவதற்காக, நாசசியார் கோயிலிலிருந்து வந்து சேர்ந்தார். இவர் கர்நாடக சதுர் ஆடுவதில் வல்லமை வாய்ந்தவர் 'ரத்னவளி' பாத்திரத்தில யாரும் பெயர் எடுப் பது கடினம் என்பதைப்பற்றி முன்பே நான் எழுதியிருக்கிறேன்.

இன்று மேனகை வேடம் பூண்டவர் கணபதி சுப்பிரமணிய ஐயர்; சிவபெருமானது திருக்குமாரர்கள் இருவருடைய பெயரையும் ஒன்றாகச் சேர்த்து தன் பெயராகவுடைய இவர், ஸ்திரீ வேஷத் திற்கு மிகவும் பொருத்தமான உருவமுடையவர்; ஆயினும் உரக்கப் பேசும் சக்தியும் பாடும் சக்தியும் இல்லாமையால் இவர் இன்று அவ்வளவாக சோபிக்கவில்லை என்பது என் அபிப்பிராயம்.

மேற்குறித்த குறைகளையும் நீக்கி உரக்கப்பேச அப்பியாசம் செய்து, சங்கீதமும் கொஞ்சம் கற்பாராயின் இவர் நாடக மேடையில் நல்ல பெயர் எடுக்கக் கூடும்.

இந் நாடகம் சிறியதாயிருந்த படியால், ஏறக்குறைய இரவு ஒன்றரை மணிக்கெல்லாம் முடிந்து விட்டது. நாடகம் முடிந்த வுடன் என் வழககம் போல், என் வேஷத்தைக் களைந்து விட்டு, சற்றுநேரம் சிரமபரிஹாரமாக மேடையின் மீது உட்கார்ந்து, என் புதிய நண்பர்களுடன் பேசிக்கொண்டிருந்த பொழுது, நாடகம் எப்படி யிருந்தது என்று வந்திருந்தவர்கள் அபிப்பிராயப் படுகிறார் கள் என்று கேட்க, அவர்களிற் சிலர், "எல்லாம் நன்றாய்த்தான் இருந்தது, ஆயினும், உங்களுடைய பாகம் என்ன அவ்வளவு சிறிய தாயிருந்ததே," என்று கேட்டனர். "அதற்கு நான் என்ன செய்வது? இதற்கெல்லாம் வட்டியுடன், நாளைய நன்றை ஆட்ட மாகிய "இரண்டு நண்பர்களில்" முதல் முதல் கடைசிவரை ஆக்டு செய்து தீர்த்து விடுகிறேன்" என்று வேடிக்கையாய் பதில் உரைத்தது எனக்கு ஞாபக மிருக்கிறது.

இனி இவ்வருஷம் டிசம்பர் மாசம் 20 ஆம் தேதி இங்கு நடந்த, "இரண்டு நண்பர்களை" ப்பற்றி எழுதுகிறேன். இந் நாடகம் மேடையில ஆடுவதற்கு அதிக கஷ்டமானது என்பதை எனது நண்பர்கள் முன்பே அறிந்திருக்கிறார்கள் என நம்புகிறேன். அப் படியிருந்தும் இதை இசசபையார், ஆதி முதல் அந்தம் வரை, ஏராளமாய் வந்திருந்த சபையோர் மெச்சும் படியாக நடித்தது, மிகவும் மெசசத்தக்கதே. தேசாபிமானியாகிய ஹைகோர்ட் வக்கீல் வைத்தியநாத ஐயர் பி.ஏ.,பி.எல்., அவர்கள் இதைப்பற்றி மறுநாள் என்னிடம் மிகவும் புகழ்ந்து பேசியது எனக்கு நன்றாய் ஞாபகமிருக்கிறது; நான் நடித்ததைப்பற்றியும் ஏதோ சிலாகித்துக் கூறினர். முதல் நாடகத்தில் நமக்கு அதிக பாகம் ஒன்று மில்லையே, இதில் எப்படியாவது சபையோரைச் சந் தோஷிக்கச் செய்யவேண்டுமென்று, நான் என்னாலியன்ற அளவு பிரயத்னபபட்டேன். கடைசி காட்சிகளில் நான் பயித்தியக்காரனாக நடித்தது, எனக்கே கொஞ்சம் திர்ப்தியைத் தந்தது. சென்னையில் சுகுண விலாச சபையில் கடைசியாக இரண்டொரு முறை நடித்

ததை விட, இச்சமயம் நன்றாக நடித்தேன் என்பது என் அபிப்பிராயம். ஆயினும் வந்திருந்தவர்களுடைய மனதையெல்லாம் கவர்ந்தவர் என் அத்யந்த நண்பரான கே. நாகரத்தினம் ஐயரே, இவர் மனோரமாவாக நடித்தது, மிகுந்த திருப்திகரமாயிருந்ததென எல்லோரும் ஒப்புக்கொண்டனர். இவர் தற்காலம் நடித்து வரும் பாத்திரங்களில் இது ஒரு முக்கியமானதென்பதற்குச் சந்தேகமில்லை. என்னுடன் சத்யவதியாக நடித்த சோமநாத ஐயர், நான் அவருக்குக் கற்பித்தபடி ஒன்றும் தவறாமல் நன்றாக நடித்தார். இவர் தேகாபியாசஞ் செய்து சற்று பருமனாயிருக்கும் தன் உருவத்தை மாத்திரம் கொஞ்சம் சரிப்படுத்திக் கொள்வாராயின் தென் இந்தியா நாடக மேடையில் இவர் நற்பெயரெடுக்கலாம் என்பதற்குஐயமின்று. சுகுமாரனாக இன்று நடித்த மா. சுப்பிரமணிய ஐயர், ஒத்திகைகளில் நடித்ததைவிட மிகவும் நன்றாய் நடித்தார். இதற்குக் காரணம் என்னவென்று பிறகு நான் வினவிய பொழுது; "உங்களுடன் நடிப்பதென்றால் எனக்கு ஒரு விதமான "குஷி" பிறந்துவிட்டது அதனால் தான் அப்படி நடித்தேன்" என்று விடை பகர்ந்தார். இதில் கொஞ்சம் முகஸ்துதி யிருந்த போதிலும், கொஞ்சம் வாஸ்தவமு மிருக்கலாம் என்று எனக்குத் தோன்றுகிறது; நாடக முழுவதிலும், ஏறக்குறைய எல்லாக் காட்சிகளிலும் என்னுடன் நடிக்கவேண்டி வந்த, இவர் நன்றாய் நடிக்கும் போதெல்லாம், சபையோா அறியாதபடி, "குட் குட்" (நல்லது நல்லது) என்று இவரை நான் உற்சாகப்படுத்திக்கொண்டு வந்தேன். நாடக மேடையில் நெடுநாள் பழகிய ஆக்டர்கள் மற்றவர்களை இவ்வாறு உற்சாகப்படுத்துவது நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது. இந்நாடகத்தில் கடைசி காட்சிகளில் நான் பித்தம் பிடித்தவனாக நடித்த காட்சிகளில், "எனக்குப பிற்காலம் இந்த பாத்திரத்தை நீங்கள் நடிக்கவேண்டி வரும், ஆகவே, பயித்தியக்காரனாக நடிப்பதை சற்று கவனித்துக் கொள்ளுங்கள்" என்று கூற அவரும் மிகவும் கவனத்துடன் அதைப்பார்த்து வந்தார். நான் நாடகமேடையில் நடித்த பல பாத்திரங்களில் பெரும்பாலானவற்றை நன்றாய் நடிக்கக் கூடியவர்கள், என் அபிப்பிராயத்தில், இரண்டு மூன்று பெயர்கள் தானிருக்கின்றனர், அவர்களில் இவர் ஒருவராம்; இந்

நாடக மாடிய பிறகு, பலநாள் இவருக்கு நான் கடிதம் எழுதும் போதெல்லாம் "என் பிரியமுள்ள சுகுமாரனுக்கு" என்றே இவருக்கு எழுதுவது வழக்கமாயிருந்தது.

ஒரு சிறு பாகமாயிருந்த போதிலும், நடிப்பதற்குக் கஷ்டமான நித்யானந்தன் பாகத்தை, ரங்கையங்கார் என்பவர் நன்றாக நடித்தார். எனது பழைய நண்பராகிய எஸ். ராஜகணபதி முதலியாருக்குப் பிறகு இவர் தான் இப்பாத்திரத்தை வெகு விமரிசையாக நடித்தார் என்பது என் அபிப்பிராயம்; என்ன காரணத்தினாலோ, இவர் இதே நாடகத்தை மறுமுறை இச்சபையார் ஆடிய போது, இவர் இவ் வேஷத்தில் நன்றாய்ச சோபிக்கவில்லை.

இந் நாடகத்தில் இன்னொரு கஷ்டமான வேடம் குருநாதன் என்பதாம். இவன் ஒரு விதமான பித்து பிடித்தவன். இதை டாக்டர் நாராயண ஐயர் எல். எம். எஸ். பி. எஸ். சி. என்பவருக்குக் கொடுத்திருந்தது. இவர் இதை நன்றாய் நடிக்கமாட்டார் என்று அவரது மதுரை நேசர்கள் கூறினார்களாம். அதன் மீது பயந்தவராய், இதைப்பற்றி கே. நாகரத்தினம் ஐயரிடம் நான் மதுரை போய்ச சேருமுன் தெரிவிக்க, அவர் நீங்கள ஒன்றும் பயப்படவேண்டாம், என்று ஆறுதல் கூறினாராம்; இதையெல்லாம் எனது அத்யந்த நண்பர், நான் மதுரைக்குப போய்ச் சேர்ந்ததும் என்னிடம் கூறி "நீங்கள் அவரைச சரிபடுத்திவிடுவீர்கள் என்று நான் வாக்குக் கொடுத்திருக்கிறேன், ஆகவே எப்படியாவது அவரை நன்றாய் நடிக்கச் செய்வது உங்கள் பாரம்" என்று என்னிடம் கூறினார். அதன் பேரில், இவரை காலைகளில், தனியாக நான் இறங்கியிருந்த நாகரத்தினம் ஐயர் வீட்டிற்கு வரச்சொலலி, இப பாத்திரத்தை நடிக்கும் விதத்தைச சொல்லிக்கொடுத்தேன். நாடகதினம் "இவர் இவ்வளவு நன்றாக நடிக்க எங்ஙனம் கற்றார்?" என்று முன்பு இவரால் இப்பாத்திரம் சரியாக ஆட முடியாது என்று கூறினவர்கள், சொன்னதே, நான் எடுத்துக் கொண்ட கொஞ்சம் சிரமத்திறகுத் தக்க பரிசாகும். இதற்குப் பிறகு இந்த நாராயண ஐயர் மதுரை வாசிகளுள் எனது நெருங்கிய நண்பர்களுள் ஒருவரானார்.

இந்த நாடகத்தில் மிகவும் சிறிதான ஒருபாகம், "ஜீமூத வாஹனன்" என்னும் மிருகங்களைப் பயிற்று விக்கும் ஒருவனுடையதே. இப்பாத்திரத்தை. ஹைகோர்ட் வக்கீல் எம். ஈஸ்வரையருக்குக் கொடுத்திருந்தது. இந்த பாகத்தில் பேசவேண்டிய வார்த்தைகள் பத்து வரிக்கு அதிகமிராது, ஆயினும் அவைகளைத் தக்கபடி பேசி இப்பாத்திரத்தை வெகு விமரிசையாய் நடித்தார். இதைப்பற்றி நான் இங்கு குறிப்பிடுவதற்கு ஒரு காரணமுண்டு. இவர் உருவத்தில், ஸ்ரீ மீனாட்சியம்மன் திருக்கலியாணத்தில், வைகையாற்றையுண்ட சிவ பக்தனுக்குச் சமானமாயிருப்பார்; தேககாந்தியிலும் சிவப்புக்கு நேர் விரோதமான வாணமுடையவர். இவரை வெளியிற் பார்ப்பவர்கள், இவராவது மேடையின் பேரில் ஏறுவதாவது, என்று சாதாரணமாய் நினைப்பார்கள். அவ்வண்ணமிருந்தும் இவர் ஜீமூதவாஹனனாக நடித்து பெயர்பெற்றதற்குக் காரணம், இவரை இப்பாத்திரத்திற்குத் தேர்ந்தெடுத்ததும், அதை நன்றாய் நடிக்க வேண்டுமென்று இவருக்கிருந்த உற்சாகமுமேயாம். எனது அபிப்பிராயம், எந்த மனிதனும் நாடக மேடையில் ஏதாவது ஒரு பாத்திரத்தை நன்றாய் நடிக்கக் கூடும், ஆனால் அதைக் கண்டெடுத்து அம்மனிதனுக்குக் கொடுப்பதுதான் கடினம் டாக்டர் சீதாராமய்யர் இந் நாடகத்தில் சூரசேனனாக நடித்தது சுமாராக இருந்தது, அ. பஞ்சநாத ஐயர் பி. ஏ., பி. எல்., ஜெயதேவனாக நடித்தார்; இவர் நன்றாய்ப் பாடி நடித்த போதிலும் இவருக்கு அப்பாத்திரம் பொருத்தமானதன்று என்பது என் அபிப்பிராயம். மற்ற பாத்திரங்களைப்பற்றி நான் இங்கு எழுதக் கூடியது எனக்கொன்றும் ஞாபகமில்லை.

இந்நாடகம் நான் எழுதியவற்றுள் பெரிய நாடகமாகையால், இது முடிவுபெற ஏறக்குறைய மூன்று மணியாயிற்று. பிறகு எங்கள் வேஷங்கள் களைந்துவிட்டு ஆக்டர்களெல்லாம் சந்தோஷமாய் மேடையின் மீது உட்கார்ந்துகொண்டு நான்கு மணி வரையில் பேசிக் கொண்டிருந்தோம்.

இந்த இரண்டு நாடகங்களின் செலவு போக, இந்த கிளப் கட்டட பண்டுக்கு, நல்ல மொத்தம் மிகுதியாகும் என்று இந்த சபையின் காரியதரிசிகளில் ஒருவராகிய எஸ். வைத்தியநாத ஐயர்

எனக்குத் தெரிவித்த பிறகு தான், என் மனம் பூரண உவகை பெற்றது. அதன் பேரில் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரரைத் துதித்துவிட்டு அன்று இரவு, (அல்லது காலை என்று சொல்ல வேண்டுமோ?) நான் உறங்கினேன்.

மறுநாள் சாயங்காலம் இந்த சபையின் கண்டக்டராகிய டி. வி. எஸ். தாதாச்சாரியார் பி.ஏ.,பி.எல்., ஒரு ஈவனிங் பார்டி (Evening Party) கொடுத்தார். அதில் ஏதோ எங்களிருவர்களைப் பற்றி உபசார வார்த்தைகளாகச் சொன்னபோது, நான் பதிலுக்கு சில வார்த்தைகள் சொல்ல வேண்டிவந்தது. அப்பொழுது நான் பேசிய சிலவார்த்தைகள் என் ஞாபகத்திலிருக்கின்றன— "நான் எங்கள் சுகுணவிலாச சபையன்றி வேறு சபையில் நடித்தது, அச்சபை ஸ்தாபிக்கபபட்ட 1891 வருஷம் முதல், இது தான் முதன் முறை. நான் இம் முறை மதுரைக்குப் புறப்பட்ட பொழுது பட்டணத்து நண்பர்களை யெல்லாம் விட்டு அங்கு போகிறோமே என்றும் மனவருத்தத்துடன் நான் வந்தேன்; ஆயினும் இங்கு எனக்கு நீங்கள் செய்த உபசாரணையினால், திரும்பி நான் போகும் பொழுது, நமது மதுரை நண்பர்களாகிய, உங்களைவிட்டுப் போகிறோமே, என்றும் வருத்தத்துடன் போகிறேன்" என்று என் உள்ளத்தில் அச்சமயம் வாஸ்தவமாய்ப் பட்டதைத் தெரிவித்தேன். மறுநாள் இரவு ஒரு விருந்து நடந்தது. அச்சமயம் எனது மதுரை நண்பர்கள், மறுபடி நீங்கள் எப்பொழுது வந்து ஆக்ட்டு செய்வது என்று கேட்டார்கள்; எனக்கு ஞாபகம் இருக்கிறபடி, அச்சமயம் நான், நான் எனது அத்யந்த நண்பருடன் கலந்து யோசனை செய்து, "இனி மேல் நாங்களிருவரும் அன்னியர்களாக உங்கள் சபையில் நடிப்பது நியாயமல்ல, எங்களிருவர்களையும் உங்கள் சபை அங்கத்தினராகச் சேர்த்துக் கொள்ளுங்கள்" என்று சொன்னேன். உடனே, கொஞ்சமும் தாமசிக்காமல் இச்சபை காரியதரிசிகளிலொருவராகிய எஸ். வைத்தியநாத ஐயர் எங்களிருவருடைய கையொப்பங்களையும் அதன் பொருட்டு வாங்கிக் கொண்டார். இவரை இதற்கு முன்பே சென்னையில் இவர் இருந்த பொழுது தெரியும், இவரது தந்தையாகிய சௌந்தரராஜ ஐயர் எனது நெருங்கிய நண்பர்; ஆகவே இவரைப்பார்த்து "ஏனையா,

எனக்குத்தான் சுகுணவிலாச சபையில் கோமுட்டி என்று பெயர்; இந்த சபைக்கு நீங்கள் ஒரு கோமுட்டியாயிருக்கிறீர் போலிருக்கிறதே!" என்று நகைத்துக் கொண்டு சொன்னேன், இச்சபையின் காரியங்களைத் தன் சொந்த காரியம் போல் அத்தனை பரிவுடன் இவர் பார்த்து வருகிறார் என்பது இச்சபையின் அங்கத்தினரெல்லாம் அறிந்த விஷயமே. இதன்பொருட்டு இவருக்கு "தம்முடு" (தம்பி) என்றே பெயர் வைத்தேன். இது கோமுட்டிகள் சாதாரணமாக உபயோகிக்கும் ஓர் பதம்; இச்சபையின் வரவை அதிகப்படுத்துவதிலும், செலவைக் குறைப்பதில் இவர் அசல் கோமுட்டியே; இவ்வாறு எழுதுவதற்காக இவர் என்மீது கோபங்கொள்ள மாட்டார் என்று உறுதியாய் நம்பியே இதை இங்கு எழுதலானேன்.

இச்சபையானது, எனது மதுரை நண்பர்கள் எனக்குத் தெரிவித்தபடி 1925 ஆம் வருஷம் ஸ்தாபிக்கப்பட்டதாம். ஆரம்பித்த இரண்டொரு வருடத்திற்குள் ஆக்டர்களுக்குள் ஏதோ காரணத்தினால் கலகம் பிறந்து சில முக்கிய ஆக்டர்கள் இதை விட்டு விலகினராம்; அதன் பேரில் இச்சபையில் மிகுந்த ஊக்கமுள்ள, மேற்சொன்ன வைத்தியநாத ஐயர் டி.வி.எஸ். தாதாசாரியார், கிருஷ்ணசாமி சாஸ்திரிகள் முதலியோர், சென்னையிலிருந்து இங்கு வந்து சேர்ந்த, எங்கள் சபை மெம்பராகிய பி. ராமமூர்த்தி பந்துலுவின் உதவியை நாடி, எம். சுப்பிரமணிய ஐயர், பஞ்சநாத ஐயர், டாக்டர் சீதாராமய்யர், சோமநாதய்யர் முதலிய புதிய ஆக்டர்களைச் சேர்த்து, சபை அழியாதபடி ஸ்தாபித்தனராம். 1927 ஆம் வருஷம் எங்கள் சுகுண விலாச சபை மதுரைக்கு போன போது இச்சபையார் எங்கள் சபைக்கு விருந்தளித்ததைப்பற்றி முன்பே தெரிவித்திருக்கிறேன்; அச்சமயம், இச் சபையில் நான் ஒரு சமயம் ஆக்ட்டு செய்வேன் என்று கனவிலும் நினைத்தவனல்ல, அப்படிச் செய்வேன் என்று யாராவது சொல்லியிருந்தால், அது முடியாத காரியம் என்று பந்தயம் போட்டிருப்பேன். பின்னால் நடக்கப் போகிறதைப் பற்றி, முன்னால் பேதை மாந்தரால் என்ன உறுதியாய்க் கூற முடியும்?

இவ்வாறு நான் வேறொரு சபையில் நடித்து பிறகு மெம்பராகச் சேர்ந்ததற்கு ஒரு முக்கிய காரணம், எனது அத்யந்த நண்பர் கே. நாகரத்தினம் ஐயர், மதுரைக்கு உத்யோக வழியில் மாற்றப்பட்டதென்பதற்குச் சிறிதும் சந்தேக மில்லை. அவர் மதுரைக்குப் போயிராவிட்டால், இந்த சபையில் நடிப்பதைப்பற்றி கனவிலும் நினைத்திருக்கமாட்டேன். நாகரத்தினம் ஐயர் ஒரு நாள் மதுரைக்கு தன்னை மாற்றி விட்டார்கள் என்று எனக்குத் தெரிவித்தபொழுது, எனது அத்யந்த நண்பராகிய அவரை விட்டுப் பிரியவேண்டியிருக்கிறதே என்று நான் வருத்தப்பட்டது எனக்கு நன்றாய் ஞாபகமிருக்கிறது. ஆயினும் அப்படி அவரை மதுரைக்கு மாற்றி யிரா விட்டால், நான் பன்முறை மதுரைக்குப் போய் நாடக மாடவும், அங்கு பல புதிய நண்பர்களை பெறவும், இல்லாமற் போயிருக்குமல்லவா? ஆகவே ஜகதீசன் நமக்கு ஏதாவது துக்கத்தை அனுப்பினல் அதுவும் ஏதோ நமது நன்மைக்காக இருக்கலாம் என்று நமது மனதை தைரியம் செய்துகொண்டு பொறுப்பதே நலம். எனது முதிர்வயதில் நான் கண்ட இவ்வுண்மையை எனது இளைய நண்பர்கள் முன்னமே அறிந்து எபபொழுதும் சந்தோஷத்துடன் வாழ்வார்களாக!

இம்மதுரை சபையார், சற்றேறக்குறைய, சுகுணவிலாச சபையின் கோட்பாடுகளையே பற்றி நடந்து வருகின்றனர்; சுகுணவிலாச சபையின் முக்கிய கருத்துகளில் ஒன்று, திராவிட நாடகங்களை அபிவிர்த்தி செய்வதாம்; ஆகவே இத்தகைய சபைகளின் மூலமாகவும் அதை அபிவிர்த்தி செய்வது நமது கடமையாகும் என்று என் மனதைத் திர்ப்தி செய்து கொண்டேன்.

இரண்டாவது நாடகம் இங்கு முடிந்த பிறகு, மதுரை மீனட்சியம்மன் கோயிலில் "படியளந்த" உற்சவம் என்பதைப் பார்க்க விருப்ப முள்ளவனுய் இரண்டு மூன்று தினங்கள் இவ்விடம் தாமதிக்க வேண்டி வந்தது; இந்த இரண்டு மூன்று தினங்களும், எனது புதிய நண்பர்கள் வீட்டில் விருந்து சாப்பிடுவதற்கே எனக்கு சரியாயிருந்தது. இடையில் ஒரு தினம், எனது நண்பர்களுடன் கள்ளழகர் எனும் சௌந்தரராஜப் பெருமாள் கோயிலுக்கு போயிருந்தேன். அச்சமயம் அதன் தர்மகர்த்தர் என்னை மிகவும் உபசரி

ணையுடன் வரவேற்று கோயிலுள்ள விசேஷங்களையெல்லாம் காண்பித்து, ஸ்வாமி தரிசனம் செய்வித்தார் இவர் மதுரை டிராமாடிக் கிளப் அங்கத்தினருள் ஒருவர்; இவ்வாறு இவர் எனது சவுகர்யங்களையெல்லாம் கவனித்து, ஸ்வாமி தரிசனம் செய்து வைத்ததும், இன்னும் இதைப்போன்ற பல ஸ்தலங்களில் எனது நண்பர்கள் எனக்குதவியதும், நான் ஏதோ தமிழ் நாடக மேடைக்காக உழைத்ததின் பலனே என்று நான் உறுதியாய் நம்புகிறேன்.

பிறகு, பிரிய மனமில்லாதவனாய் எனது புதிய நண்பர்களை விட்டுப்பிரிந்து சென்னை வந்து சேர்ந்தேன். வந்தவுடன் டிசம்பர் மாதத்திய நாடகங்களில், "தாசிப்பெண், வள்ளி, என்னும் இரண்டு நாடகங்களில், நானும் நாகரத்தினம் ஐயரும் நடித்தோம்.

—oo:-o:oo—

# 31-ஆவது அத்யாயம்

1930 ஆம் வருஷத்தின் ஆரம்பத்தில் நான் புதியதாய் எழுதி அச்சிட்ட "கொடையாளி கர்ணன்" எனும் நாடகத்தை ஒத்திகை செய்து, மார்ச்சு மாதத்தில் இரண்டு முறை அதை ஆடினோம். இந்நாடகமானது, பல வருடங்களுக்குமுன், எனதாருயிர் நண்பர் ரங்கவடிவேலு இறந்தவுடன் ஆரம்பிக்கப்பட்டது. அச்சமயம் இனி நாடக மேடையின் மீது வேறொருவருடனும நான் நடிப்பதில்லை என்று தீர்மானித்த படியால், இந்நாடகத்தையும், "சகதேவன் சூழ்ச்சி" என்னும் நாடகத்தையும் எழுத ஆரம்பித்தேன். அப்பொழுது ஆரம்பித்தபோதிலும், நான் ஸ்மால்காஸ் கோர்ட் ஜட்ஜாயிருந்த காலத்தில் அவைகளைப் பூர்த்தி செய்ய அவகாச மில்லாமற் போயிற்று; 1928 ஆம் வருடம் நான் அவ்வேலையைவிட்டு நீங்கின பிறகு, அவைகளிரண்டையும் பூர்த்தி செய்து அவ்வருடத்தின் கடைசியில் அச்சிட்டேன்.

நான் சிறு வயதில் மகாபாரதத்தைப் படித்தது முதல், பரம தயாளுவான கர்ணனுடைய நற்குணங்கள் என் மனதைக் கவர்ந்தன. ஆகவே நான் ஒரு சிறிய நாடகாசிரியனான பிறகு, இந்த பாரத வீரனைப் பற்றி ஒரு நாடகம் எழுதவேண்டும் என்னும்

அபேட்சை அதிக மிருந்தது. அந்த அபேட்சையை நிறைவேற்ற இத்தனை காலம் பிடித்தது. இந் நாடகத்தில் கர்ணனுடைய ஜீவிய சரித்திரத்தில் சில முக்கியமான அம்சங்களை விட்டுவிட்டதாக, எனது நண்பர்களில் சிலர் குறை கூறியுள்ளார். அவர்களுக்கு என் பதில் அடியில் வருமாறு; கர்ணன் மடிந்தவுடன் கர்ணனைக் கொன்றோமே என்று அர்ஜுனன் கர்வபட்டதாகவும், அதை அடக்க ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர், "அர்ஜுனா, கர்ணனைக் கொன்றது, நீ மாத்திரமல்ல, வேதியர் ஒருவா, பரசுராமர், தேவேந்திரன், குந்தி, சலலியன், நான, நீ, ஆகிய ஏழுபெயா!" என்றனர், என்பதை என் கதையின அஸ்திவாரமாக எடுத்துக்கொண்டு, அந்த ஒவ்வொரு சந்தர்பபத்திலும், கர்ணனது தயாளத்துவமே, அவனது மரணத்திற்கு, உடந்தையாயிருந்தது என்பதை ரூபிக்க—இந்த சந்தர்ப்பங்களை மாத்திரம் எடுத்துக்கொண்டு ஒரு நாடகமாக்கி எழுதினேன்; ஆகவே, மற்றும் சில விஷயங்கள் கர்ணனுடைய சரிதையில் குறிக்கத் தக்கனவாயினும், அவைகள் இந் நாடகத்தில் எழுதாது விடுத்தேன்.

இந் நாடகத்தை எங்கள் சபையார் நடித்த பொழுது, காலஞ்சென்ற கன்னையா, எங்களுக்குச செயத உதவியை, நான் எழுதாமல் விடுவது, செய் நன்றி மறந்த குற்றத்திற்குள்ளாக்கும் என்னை; ஆகவே அதைபபறறி இங்கு எழுதுகிறேன்.

இசசமயம் அவர் தன் "பகவத் கீதை" நாடகத்திற்காக ஏற்பாடு செய்து கொண்டிருந்தா; அபபொழுது, நான் கர்ணனைப பற்றி எழுதிய இந் நாடகத்தைப் பற்றி கேள்விப்பட்டு, அக் கதையின் விவரங்களைக் கேட்டறிந்து, தன்னால் இதற்கு என்ன உதவி செய்யக் கூடும் என்று கேட்டனுபபினார். அப்பொழுது, எங்கள் சபையார் இந்நாடகத்திறகாக, கர்ணார்ஜுன யுத்தத்தின் போது உபயோகப்பட இரண்டு ரதங்கள் செய்யவேண்டுமென்று தீர்மானித்து அதற்காக ரூபாய் 200 எடுத்து வைத்திருந்தார்கள். இந்த இரண்டு ரதங்கள் உங்கள் மூலமாகச் செய்து கொடுக்க வேண்டுமென்று நாங்கள் கேட்க, இந்த இருநூறு ரூபாயையும் வாங்கிக் கொண்டு, அதற்குமேல் அதற்கு இருமடங்கு, தன் கையை விட்டுச் செலவழித்து எங்கள் சபைக்கு இரண்டு ரதங்களைச் செய்து

கொடுத்தார். அவற்றுள், அர்ஜுனனது ரதமானது கர்ணன் நாகாஸ்திரப் பிரயோகம் செய்யும் போது, தேர்த்தட்டு, ஸ்ரீ கிருஷ்ணன் சூழ்ச்சியினால் இறக்கும்படி, தந்திரமான விசையை யுடையதாய்ச் செய்யப்பட்டது; இவையன்றி யுத்தத்திற்கு வேண்டிய அம்புகளும், நாகாஸ்திரமும், முதற் காட்சிக்கு வேண்டிய பசுவும் அதன் கன்றும், எல்லாம், செய்து கொடுத்தார். இவை களெல்லாம் அன்றி, நான் கர்ணனாக அணிய வேண்டிய கவசகுண்ட லங்களை, பொன் கில்டு உடையதாய்ச செய்து கொடுத்தார். அன் றியும் நாங்கள் இந் நாடகத்திற்கு கடைசி ஒத்திகை செய்த பொழுது, அருகிலிருந்து, இவைகளை யெல்லாம் எப்படி உபயோ கிக்க வேண்டுமென்று சொல்லிக் கொடுத்தார். இத்தகைய உதவி புரிந்த இத்தயாள குணமுடையவர்க்கு எங்கள் சபையும் நானும் செய்யக் கூடிய கைம்மாறு என்னுளது? சாதாரணமாக ஆமெடூர் (amateur) சபைகளிலுள்ளவர்களே ஒருவருக்கொருவர் உதவி புரிவதைக் காண்பது கார்த்திகை பிறையைக் காண்பது போலாம்; நாடக மாடுவதைத் தன் ஜீவனோபாயமாகக் கொண்ட இவர், எங் கள் சபையின் மீது கொஞ்சமும் மாச்சரியமின்றி, இவ்வாறு உதவி செய்தது மிகவும் மெச்சத் தக்கதாம்.

இந் நாடகமாடிய இரண்டு முறையும், எனது அன்னையாக— அதாவது குந்திதேவியாக,— என் பழய நண்பர் அ. கிருஷ்ணசாமி ஐயர் நடித்தார். என்னைப் போல் இவருக்கு வயது அதிகமாக ஆகியும் இவர் மிகவும் நன்றாய் நடித்துப பாடினார் என்பது வந்திருந்தவர்கள் எல்லோருடைய அபிப்பிராயம். வயதானபடியால் பாடும் பொழுது கொஞ்சம் சிரமப்பட்டு பாடினாலும், குரலில் பழய இனிமை இன் னும் போகவில்லை. "கடுகு இறந்தாலும் காரம் போகாதல்லவா?"

இக் "கொடையாளி கர்ணன்" என்னும் நாடகம் இரண்டு வருடங்களுக்கு முன்பு நான் அச்சிட்டதாயிருந்த போதிலும் இதர சபைகளால் பதினேழு பதினெட்டு முறை ஆடப்பட்டிருக் கிறது; இதில் ஒரு ஸ்திரீ பாத்திரம் இருக்கிறபடியால், ஸ்திரீ ஆக் டர்கள் அதிகமாயுடைத்தாயிராத சபைகளில் இதை எளிதில் ஆடலாம்.

இக் கர்ணனது நாடகத்தை எழுதி முடித்தவுடன், " சகதேவன் சூழ்ச்சி " என்கிற ஒரு சிறு நாடகத்தையும் எழுதினேன். இந்நாடகத்தில் ஒரு விசேஷமென்னவென்றால், இதில் ஸ்திரீ பாத்திரமே கிடையாது! பள்ளிக்கூடங்களில் வாசிக்கும் மாணவர்கள் இதை எளிதில் ஆடலாம் என்பது என் கருத்து. மஹாபாரதத்தில் சகதேவன், பீமன் அர்ஜுனன் முதலிய பாத்திரங்களுக்கு முன்பாக அவ்வளவாகப் பிரகாசிப்பதில்லை; ஆயினும் அவன் சிறந்த புத்திசாலி, மிகவும் பக்திமான் என்கிறதை விளக்க, அவன் தன் சூழ்ச்சியினால், ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய சூதையறிந்து, அவரைத் தன் பக்தி வலையாற் பிணைத்து, அவரிடமிருந்து தங்கள் ஐவரை மாத்திரம் பாரதயுத்தத்தில் எப்படியாவது காப்பாற்றவேண்டுமென்று வரம்பெறுகிறான். இதையே இந்நாடகக் கதையாக வைத்து எழுதியுள்ளேன்.

இவ்வருஷம் ஜுலை மாசம் 19 ஆம் தேதி எங்கள் சபையார் எனது " சுபத்திரார்ஜுனா " என்னும் நாடகத்தை மறுமுறை ஆடினார்கள். இதற்கு முக்கியகாரணம் முதன் முறை இது எங்கள் சபையோரால் ஆடப்பட்ட போது, நானும் நாகரத்தின ஐயரும் மதுரையிலிருந்தபடியால், நாங்கள் முக்கிய பாத்திரங்களை எடுத்துக் கொள்ள ஏலாமற் போனதே; எங்கள் சபையார் நாங்களிருவரும் இந்நாடகத்தில் அர்ஜுனனாகவும் சுபத்திரையாகவும் நடிப்பதைக் காண வேண்டுமென்று இந்நாடகத்தை மறுபடியும் வைத்துக் கொண்டார்கள். நாங்கள் ஆடியபோது முதன் முறை யாதோ காரணத்தினால் ஆடாமல் விட்டுப் போன கடைசி காட்சிகள் இரண்டு மூன்றையும் சேர்த்து நாங்கள் இம்முறை ஆடினோம்.

மேற்சொன்ன நாடகங்களன்றி இவ்வருடம் செப்டம்பர் மாதம் 21 ஆம் தேதி, எனது " கள்வர் தலைவன் " என்னும் நாடகமானது, எங்கள் சபையின் தொள்ளாயிரத்து நாடகமாக ஆடப்பட்டது. இந்நாடகமானது இதற்கு முன் எங்கள் சபையோரால் 32 வருடங்களுக்கு முன்தான் ஆடப்பட்டது இதை மறுபடி ஆடாததற்குக் காரணம் நான் முன்பே இதை வாசிக்கும் எனது நண்பர்களுக்குத் தெரிவித்திருக்கிறேன். இதை இவ்வருஷம் எனது நண்பர் எஸ். சத்யமூர்த்தி ஐயர் ஆட் ஹாக் (ad hoc) கண்டக்டரா

யிருந்து நடத்தலாமா என்று என்னைக் கேட்டனர். "அதற்கு ஒரு ஆட்சேபனையுமில்லை; இதை இதர சபைகள் பன்முறை நடித்திருக்கின்றன, அவர்களுக்கெல்லாம ஒரு கெடுதியும் சம்பவிக்கவில்லை, என்னை மாத்திரம் அதில் ஆடும்படி கேளாதீர்" என்று சொல்லி அதற்கு காரணத்தையும் அவருக்குத் தெரிவித்தேன். அதன் பேரில் அவர் இந்நாடகத்தை எடுத்துக்கொண்டு ஆக்டர்களைத் தயார் செய்து ஆடிவைத்தார்.

1930 ஆம் வருஷம் ஏப்ரல் மாசம் ஈஸ்டர் (Easter) விடுமுறையில், இரண்டாம் முறை நாஙகளிருவரும் மதுரையில் மதுரை டிராமாடிக் கிளப் அங்கததினராக இரண்டு நாடகங்களை நடத்தினோம். இதற்குள்ளாக எனது அத்யந்த நண்பர் நாகரத்தினம் ஐயர் மதுரையிலிருந்து சென்னைக்கு மாற்றப்பட்டார். ஆகவே நாங்களிருவரும் அங்குபோகவேண்டிய தாயிருந்தது; இதற்காகத் தான் அவருக்கு விடுமுறை காலமாகிய ஈஸ்டர் சமயத்தில் நாடகங்களை நடத்தவேண்டி வந்தது. என்னை நான்கைந்து தினங்களுக்கு முன்பாக மதுரைக்கு வரும்படி எனது மதுரை நண்பாகள் கேட்டுக் கொண்டபடி முன்னதாகவே நான் போய் இங்கு நடத்தவேண்டிய "மனோஹரன்", "லீலாவதி சுலோசனா" இரண்டு நாடகங்களுக்கும் ஒத்திகை பார்த்து வந்தேன். முதல நாடகதினத்திற்கு ஒரு நாள் முன்பாக எனது நண்பர் நாகரத்தினம் வந்து சேர்ந்தார். இந்த இரண்டு நாடகங்களும் மிகவும் விமரிசையாக நடத்தப்பட்டன என்பது என் அபிபபிராயம். முதல இரண்டு நாடகங்களை விட, இவ்விரண்டு நாடகங்களுக்கு வசூல அதிகமாயிருந்தது. இந்த இரண்டு நாடகங்களிலும் நான் இரண்டொரு சமாசாரங்கள் தவிர இங்கு குறிக்கத் தக்க விஷயங்கள் ஒன்றும் அதிகமாயில்லை. நாகரத்தினம் ஐயர் விஜையாளாக நடித்தது மிகவும் கொண்டாடப் பட்டது. இரண்டாவது நாடகத்தில எனது மதுரை நண்பர் மா. சுப்பிரமணிய ஐயர் அவ்வூா பட்டிக் காட்டானைப போல, சாரங்கன் பாத்திரத்தில் வேடம் புனைந்தது மிகவும் மெச்சபபட்டது. அன்றியும் சாரங்கனை ஸ்ரீ தத்தன் அடித்துத் தள்ளும் காட்சியில, என் கையில் வைத்திருந்த யோக தண்டத்தினால, வாஸ்தவத்தில் நன்றாய்ப் புடைத்து விட்டேன் அவரது உடம்பில் தழும் பேறும்

படியாக! இதைப் பற்றிப் பேச்சு வரும் போதெல்லாம் சுப்பிரமணிய ஐயர், என்னை ஏளனம் செய்வதை இன்னும் விட்டிலர்.

நானும் நாகரத்தின ஐயரும் அடிக்கடி வந்து நாடகமாடுவதென்றால் நன்றாயிராது, நீங்களாக ஏதாவது நாடகங்களை ஆடுங்கள் என்று நான் கேட்டுக் கொண்டதின் பேரில், மதுரை டிராமாடிக் கிளப்பார் எனது "சுபத்திரார்ஜுனா" நாடகத்தை எடுத்துக்கொண்டனர். ஆயினும் நான் அதில் ஆடாவிட்டாலும், ஆக்டர்களுக்கு ஒத்திகை செய்து வைக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டனர். அதற்கிசைந்து நான் மதுரைக்கு "மது விலக்கு பிரசார" சம்பந்தமாகப் போகவேண்டிய சமயத்தில் அந்த நாடகத்தை வைத்துக் கொள்ளச் செய்து, அந்த சமயத்தில் இந் நாடகத்தின் ஒத்திகைகளை நடத்தி, அருகிலிருந்து இந் நாடகத்தை அவர்களைக் கொண்டு நடிக்கச செய்தேன். இதை வாசிக்கும் எனது நண்பர்களுக்கு நான் மதுவிலக்கு சங்கம் ஒன்றைச சேர்ந்திருப்பதை முன்பே தெரிவித்துள்ளேன். 1929 ஆம் வருஷம் கவர்ன்மெண்ட் மந்திரிகளில் ஒருவராயிருந்த எனது நண்பர் எஸ். முத்தையா முதலியார் அவர்கள், துரைத்தனதாரும் மது விலக்கு பிரசாரம் நடத்த வேண்டுமென்று சட்ட சபையில் அங்கத்தினரை ஆமோதிக்கச செய்து, அதற்காகக் கொஞ்சம் ரூபாயைப் பிரத்யேகமாக எடுத்துவைத்து, சென்னை ராஜதானியில ஒவ்வொரு ஜில்லாவிலும் மதுவிலக்கு பிரசார கமிட்டிகளை ஏற்படுத்தி, இக் கமிட்டிகளுக்கெல்லாம் மேல் பார்வையாக சென்னையில் ஒரு சென்டிரல் (Central) கமிடி ஏற்படுத்தி, அதன் கிளையாக பப்ளிசிடி (Publicity) கமிடி என்று ஒன்றை ஏற்படுத்தினர். அப் பப்ளிசிடி கமிடிக்கு என்னை அக்கிராசனாதிபதியாக ஏற்படுத்தினர். இது விஷயமாக நான் சில ஜில்லாக்களைப் பார்த்து வரவேண்டி வந்தது. இக்காரியமாக இவ்வருஷம் ஜுன் மாசம் கும்பகோணத்திற்கும் மதுரைக்கும் போகவேண்டி வந்தது. இந்த சந்தர்ப்பத்தில் தான் மதுரையில் "சுபத்திரார்ஜுனா" நாடகத்தை நடத்தினேன். மேற் கண்ட மது விலக்கு பிரசார விஷயத்தைப பற்றி இவ்வளவு விவரமாய் எழுதியதற்கு இன்னொரு முக்கிய காரணம் உண்டு. அதாவது இந்த மது விலக்கு பிரசார கமிட்டியாரின்

தூண்டுதலினால் நான் இவ்வருஷம் (1930) "உண்மையான சகோதரன்" என்னும் நாடகத்தை எழுதி முடித்தேன். மதுவிலக்கு விஷயமாக எங்கள் கமிட்டியார் பல விஷயங்களை யோசித்து வந்த பொழுது, அதிலிருந்த எனது நண்பர்களில் அநேகர், "மதுவினால் உண்டாகும் தீமைகளைப் பற்றி நீங்கள் ஒரு நாடகம் எழுதி, அதை ஜில்லாக்கள் தோறும் ஆடி வைத்தால், நாம் எடுத்துக்கொண்ட காரியத்திற்கு மிகவும் அனுகுணமாயிருக்கும்", என்று வற்புறுத்தினர். அதன் பேரில் "உண்மையான சகோதரன்" என்னும் நாடகத்தின் கதையை யோசித்து, அதன் சாராம்சத்தை அவர்களுக்குத் தெரிவிக்க, அவர்கள் மிகவும் குதூஹலத்துடன் அதை எப்படியாவது கூடிய சீக்கிரத்தில் நாடகமாய் எழுதி முடிக்க வேண்டுமென்று வற்புறுத்தினர். அதன் பேரில் இவ்வருஷம் நான் பெங்களூருக்குப் போயிருந்தபொழுது, பெரும்பாலும் அதை எழுதி முடித்தேன். உடனே அச்சிட்டு, எங்கள் கமிடியார் அனுமதியின் மீது ஜில்லா கமிடிகள் ஒவ்வொன்றிற்கும் சில புஸ்தகங்களை அனுப்பினேன். அதன் பேரில் இவ்வருஷத்திற்குள்ளாக பத்து பன்னிரண்டு முறை ஜில்லாப் பிரசார கமிடிகளால் இந்நாடகம் ஆடப்பட்டது. நான் எழுதிய நாடகங்களில், சுகுண விலாச சபையார் ஆடு முன்பாக மற்றவர்கள் ஆடிய நாடகம் இது ஒன்றும். சாதாரணமாக ஏதாவது நாடகமொன்றை நான் எழுதினால், அதை எங்கள் சபையில் நடித்து, ஏதாவது சீர் திருத்த வேண்டியிருந்தால் அப்படிச் செய்த பிறகே, மற்ற சபைகளுக்கு அதை ஆட நான் உத்தரவு கொடுப்பது வழக்கம். இவ்வழக்கத்தினின்றும் இந்நாடகத்தில் நான் மாறவேண்டி வந்தது. நான் எழுதிய நாடகங்களுள், தின வர்த்தமான பத்திரிகைகளால் மிகவும் கொண்டாடப்பட்ட நாடகங்களில் இது ஒன்றாகும். இந்த நாடகம் எழுதும் போது எனக்கு ஒரு வேடிக்கையான கஷ்டம் நேர்ந்தது. கதையை எழுதுவதில் கஷ்டப்பட வில்லை அதிகமாக; கதாநாயகனுக்குப் பெயர் கொடுப்பதில் தான் அதிக கஷ்டப்பட்டேன்! இதுவோ, தற்காலத்திய ஜனசமூக (Social) நாடகம். ஆகவே கதா நாயகன் தற்காலத்திய மனிதனாய் இருக்க வேண்டி வந்தது; ஆகவே, அவனை பிராம்மணனோ, க்ஷத்திரியனோ

வைசியனோ, சூத்திரனோ வாக ஆக்கவேண்டி வந்தது. சாதாரண மாக சூத்திர ஜாதியில் தான் மதுபானம் செய்யும் கொடிய பழக்கம் அதிகமாயிருக்கிறதென்பதை கவனித்தவனாய், அவனை ஒரு சூத்திர னாக சிருஷ்டித்தேன். (மற்ற ஜாதியார் குடிப்பதில்லை என்று நான் சொல்ல வரவில்லை, எல்லா ஜாதியிலும் குடியர்களிருப்பதைப் பல வருடங்களாக அறிந்துள்ளேன், ஆயினும் சூத்திரர்களில் தான் இக் கெட்ட பழக்கம் அதிகமாயுண்டு என்பது என் அனுபவத் தீர்மா னம்) சூத்திரனாக்கிய பிறகு, அவனை முதலியாராக்குவதா?, நாயுடு வாக்குவதா?, பிள்ளை யாக்குவதா? இன்னும் மற்றெந்த பிரிவினனாகச் செய்வது? என்னும் சங்கைபிறந்தது. எந்தப்பிரிவினனா யாக்கினாலும் அப் பிரிவினர் என் மீது குறை கூறுவார்கள், இந்த தர்ம சங்கடத் தினின்றும் தப்புவதற்கு மார்க்க மிலலை, என்று யோசித்து கதா நாயகனை, நாயுடு வாக்கினேன்; பலராம நாயுடு என்றும் பெயர் கொடுத்தேன். பலராமன் என்று பெயர் கொடுத்ததற்குக் கார ணம், பாகவதத்தில, ஸ்ரீ கிருஷ்ணனுடைய தமயனாகிய பலராமர், மதுபானத்தில மிகுந்த பிரீதியுள்ளவர் என்பதைக் கவனிக்கத் தக்கது. கதா நாயகனுடைய தம்பிக்கு கிருஷ்ணசாமி என்னும் பெய ரையே கொடுத்துள்ளேன். அன்றியும் மற்ற வர்ணத்தாரும் பிரிவின ரும் மனஸ்தாபப் படாதபடி, கதா நாயகனுடன் மதுபானம் செய்யும் நண்பர்களில, ஒருவனை ஐயராகவும், ஒருவனை முதலியாராகவும், ஒருவனைப் பிள்ளையாகவும் ஆக்கினேன். இவ்வளவு முயற்சி யெடுத் துக் கொண்டும் நான் கோரிய எண்ணம் ஈடேறாமற் போயிற்று! நாடகம் எழுதி முடித்தவுடன், அச்சிடுவதற்கு முன்பாக, நான் ஒரு அங்கத்தினனாய்ச் சேர்ந்திருக்கும் ஹிந்து குட் டெம்பிளார்ஸ் லீக் (Hindu Good Templars' League) என்னும் மதுவிலக்குச் சபையில், அதைப படித்துக் காட்டினேன்; அதைக் கேட்ட நண் பர்களெல்லாம் மிகவும் நன்றாயிருக்கிறதென மெச்சினர். அவர் களுள் ஒருவர் மாத்திரம் (அவர் ஒரு நாயுடு என்பதை நான் இதை வாசிக்கும் எனது நண்பர்களுக்கு எடுத்துக் கூற வேண்டியது அவசியமில்லை) என்னை ஒரு பக்கமாய் அழைத்துக்கொண்டுபோய், "எல்லாம் நன்றாய்த்தானிருக்கிறது பிரதர், (Brother) ஒன்றுமாத் திரம் தான் எனக்குப் பிடிக்கவில்லை! இந்நாடகத்தின் ஹிரோவை

நாயுடுவாக எழுதியதை மாற்றி வேறு ஜாதியாருக எழுதக் கூடாதா?" என்று ரகசியமாகக் கேட்டார். அதற்கு நான் "அப்படிச் செய்வதற்கு ஆட்சேபனை இல்லை; ஆனால் ஒரு கஷ்டம் தானிருக்கிறது, அதற்கு ஏதாவது வழி சொல்லுவீராஞல் உடனே மாற்றி விடுகிறேன்; நாயுடு என்பதை மாற்றி, ஐயராக்கினல், ஐயர்கள் கோபித்துக் கொள்வார்கள், ஐயங்கார் ஆக்கினல், அவர்கள் கோபித்துக் கொள்வார்கள், முதலியாராக்கினல், எங்களவர்கள் கோபித்துக் கொள்வார்கள், பிள்ளையாக்கினல், பிள்ளைமார் கோபித்துக் கொள்வார்கள்; எந்த ஜாதியாருக எழுதிய போதிலும், அச்சாதியார் உங்கள் நியாயப்பிரகாரம் மன வருத்த மடைவார்கள்! ஆகவே இதற்கு ஒரு வழி நீங்களே சொல்லுங்கள்." என்று கேட்டேன். அதன் மீது இந்த ஆட்சேபனைக்குத் தக்க பதிலுரைக்க வகையில்லாதவராய், அவர் வேறு வழி யிலலை, என்று ஒபபுக் கொண்டனர். இதை நான் அந் நாடகத்தின் முகவுரையில, என் மீது எசசாதியாரும் கோபியாதபடி எழுதியுள்ளேன். இந்த ஜாதிபேதக் கலகமானது நமது நாட்டை விட்டு எபபொழுது அகலுமோ அறியேன். நாடக மெழுதுவதிலும் இக் கலகம் பிறந்தால், பிறகு எதில்தான் இது நுழையாது? இந்த விஷம் நமது தேசத்தைவிட்டு எபபோது போகுமோ, அப்பொழுதுதான் நமது தேசம் ஐக்கியப்பட்டு, நாம் முன்னுக்கு வருவோம். அபபொழுது தான் நமக்கு சுயராஜ்யம் கிடைத்தாலும் நிலைக்கும், என்பது என் துணிவு; இதை விஸ்தரித்து "பிராம்மணனும் சூத்திரனும்" என்கிற பெயரையுடைய ஒரு நூதன நாடகத்தை சென்ற இரண்டு வருடகாலமாக எழுதி வருகிறேன். அது இன்னும் பூர்த்தியாகவில்லை. இறைவன் இன்னருளால் அதை சீக்கிரம் பூர்த்தி செய்து அச்சிடலாமென்றிருக்கிறேன். அந்நாடகம் அச்சிட்டு வெளியானவுடன், இருதிறத்தாரும் என்னை வைவார்கள் என்பது திண்ணம். ஆயினும் ஒரு நூலாசிரியன், எவ்வளவு அற்பனுயிருந்த போதிலும் பட்சபாதமின்றி, ஒருவருக்கும் பயப்படாது எழுதவேண்டியது அவன் கடமை எனக் கருதியவனுய், இருதிறத்தாரிடமுள்ள குற்றங்களை அஞ்சாது எடுத்துக் காட்டி, அவர்கள் ஐக்கியப் பட்டாலொழிய நமது நாடு முன்னுக்குவர மார்க்கமில்லை என்பதை

அந்நாடகத்தின் மூலமாக, தமிழ் உலகத்திற்குத் தெரிவிக்கலா மென்றிருக்கிறேன் எல்லாம் வல்ல ஈசன் அப்பிரயத்னத்திற்கு தன் இன் அருள் பாலிப்பாராக! (இதை எழுதியது பல வருடங் களுக்கு முன் என்பதை இதை வாசிப்பவர்கள் கவனிப்பார்களாக).

இவ்வருஷம் செப்டம்பர் மாதம், எனது அத்யந்த நண்பர் கே. நாகரத்தினம் ஐயரும் நானும், மதுரை டிராமாடிக் கிளப்பார் வேண்டுகோளின்படி மறுபடியும் மதுரைக்குப் போய், "ஊர்வசியின் சாபம்", "வள்ளி மணம்" ஆகிய இரண்டு நாடகங்களையும் நடத்தி னோம்.

இச்சமயம் மதுரையில் நாங்களிருவரும் ஆடியது மூன்றாம் முறையாகும். இங்கு "ஊர்வசியின் சாபம்" நடத்தியபொழுது நான் அனுபவித்த ஒரு வேடிக்கையான கஷ்டத்தை எழுதவிரும்புகிறேன். இந்நாடகத்தைப் படித்தவர்கள், இதன் முதற் காட்சியில் அர்ஜு னன் மௌனமாய்த் தவஞ் செய்ய வேண்டியிருக்கிறது என்பதை நன்கு அறிவார்கள். சாதாரணமாக இக்காட்சி இருபத்தைந்து அல்லது முப்பது நிமிஷம் பிடிக்கும்; அதுவரையில், இருகைகளை யும் தலைமேற் கூப்பிக்கொண்டு, விழித்த கண்ணினனாய், பஞ்சாக் கினி மத்தியில் தவமிருப்பது போல இருந்து வழக்கப்பட்டிருக் கிறேன் இம்முறை இந்நாடகம் மதுரையில் நடிக்கப்பட்ட பொழுது சரியாக ஒன்றேகால் மணிநேரம் அங்ஙனம் அசையாமல் இருக்க வேண்டிவந்தது! ரம்பை, மேனகை, திலோத்தமை, ஊர்வசி ஆகிய அப்சர ஸ்திரீகள், தனியாகவும் ஒன்றாகவும் கூடி கானம் செய்தது மன்றி ரம்பை வேஷம்பூண்ட, எனது மதுரை நண்பர் கணபதி சுப்ர மணிய ஐயர், நிர்த்தனம் வேறு செய்தார். இதெல்லாம் பார்ப் பதற்கும் கேட்பதற்கும், சபையோர்க்கு சந்தோஷத்தைத்தந்த போதிலும், அர்ஜுன வேஷதாரியாகிய எனக்கு, சிரமத்தைத் தந் தது; இந்த ஒன்றேகால் மணிநேரம் கைகளை உயர்த்தி அஞ்சலி ஹஸ்தனாய் இருந்தபடியால் காட்சியின் முடிவில் என கைவிரல்கள் விறைத்துப் போயின! அவைகளை என் நண்பர் ஒருவரைக்கொண்டு உருவச் செய்த பிறகே என் சுவாதீனத்திற்கு வந்தன! ஆயினும் இக்கஷ்டத்தை அறிந்த சபையோர் இக்காட்சியின் முடிவில், ஆடிப் பாடிய அப்சரஸ் ஸ்திரீகளுக்கு ஒரு படங்கு கரகோஷம் என்றால்,

“சும்மா இருக்கும் சன்யாசிக்கு இரட்டைப்படி” என்பது போல், சும்மா இருந்த அர்ஜுன சன்யாசிக்கு, இருமடங்கு கரகோஷம் அளித்தனர்.

இந்நாடகத்தின் இடைக் காட்சிகளில், எனது மதுரை நண்பர்கள் பஞ்சநாத ஐயரும் டாக்டர் சீதாராமையரும், மிகவும் விமரிசையாக நடித்தனர் என்பது, எனது அபிப்பிராயம் மாத்திரம் அன்று, சபையோருடைய அபிப்பிராயமும் அப்படியே.

இங்கு நடத்திய “வள்ளிமணம்” என்னும் நாடகத்தில், சுப்பிரமணியராக வந்த நான், அதிகமாகப்பாடாத குறையினை, வள்ளியாக வந்த எனது அத்யந்த நண்பர் நாகரத்தினம் ஐயர், தான் வேண்டிய மட்டும்பாடி, சபையோரை மறக்கச செய்து விட்டார். இந்நாடகததில் வள்ளியாக அவர் நடித்தது மிகவும் நன்றாயிருந்ததென, அன்று இந்த நாடகத்தைபபாாக்க வந்திருந்த, இதர சபை அங்கத்தினர் உட்பட எல்லோரும் ஒபபுக்கொண்டனர்.

இந் நாடகத்தின் இடைக்காட்சி யொன்றில், எனது மதுரை நண்பர் மா. சுபபிரமணிய ஐயர், மதுரையில் சுண்டல் விற்கும் ஒருவனைப் போல், அசசம் அப்படியே வேஷம் தரித்து வந்ததை இப்பொழுதும் நினைத்துக்கொண்டாலும் எனக்கு நகைப்பு வருகிறது. இந்த வேடததிறகு அசலாகிய அசசுண்டல் விறபவனை இதறகு முன் நான் பார்த்ததில்லை, பிறகு ஒரு சமயம் நான் மதுரைக்குப் போன போது அகஸ்மாத்தாய் வடக்கு சித்திரை வீதியில் அவனைக் கண்ட பொழுது, ஆச்சரியத்துடன் திடுக்கிட்டு இரண்டு நிமிஷம் அவன் அருகில் நின்று கவனித்தேன். அபபொழுது தான் எனது நண்பர் அவனைப போல் வேஷம் தரித்ததைக் கண்டு, சபையோர் கரகோஷம் செய்ததின் அர்த்தத்தைக் கண்டேன்! எனது பழைய நண்பர் காலஞ்சென்ற வேதம் வெங்கடாசல ஐயருக்குப் பிறகு, மதுரை நண்பர் சுப்பிரமணியரைப் போல், எந்த வேடம் தரித்தாலும் அதற்குக் தக்கபடி சிரமம் எடுத்துக் கொள்பவரைக் கண்டேனில்லை நான்.

இந்த வள்ளி மணம் நாடகம் முடிந்த மறுநாள் நடந்த ஒரு விர்த்தாந்தத்தை இங்கு எழுத விரும்புகிறேன். இந்நாடகத்தில்

"முருகன்" என்கிற பெயருக்குத் தக்கபடி எனது நண்பர் கிருஷ்ணசாமி சாஸ்திரிகள், அப்பொழுது ஐம்பத்தெட்டு வயதாயிருக்கும் என்னை, பதினாறு வயதுடைய வாலிபனைப் போல், வேஷம் போட்டு வைத்தார். இந்த சூட்சுமம் அறியாத, இதற்கு முன் என்னைப் பார்த்திராத, வக்கீல் ஒருவர், எனக்கு இன்ன வயது என்பதைக் கேட்டபோது அதை நம்பாதவராய், என்னைக் காணவேண்டுமென்று இச்சை கொண்டு, நாடகத்தின் மறுநாள், நான் அசசமயம் தங்கியிருந்த எனது மதுரை நண்பர் டாக்டர் நாராயண ஐயர், வீட்டிற்கு அவரைக் காணவேண்டுமென்னும் ஓர் வியாஜத்தை வைத்துக்கொண்டு வந்து சேர்ந்து, என்னை நேரிற் பார்த்தார். அபபொழுதுதான் அவருக்கு, என் வயதைப்பற்றி அவருக்கு மற்றவர்கள் சொன்னது உண்மையென வெளியாயிற்றும். இதையெல்லாம், பிறகு நாங்களிருவரும் கலந்து வார்த்தையாடிய பொழுது, அவரே எனக்குச சொன்னார். நாடக மேடையில் க்ரீன் ரூம் (Green Room) உத்தியோகஸ்தர்களின் திறத்தை அவர் அப்பொழுது தான் முதல் முதல் கண்டார்!

இவ்வருஷம் எங்கள் சபையார், எனது நண்பர் வி. சி. கோபால ரத்தினம் ஐயங்கார் எழுதிய "ராஜ பக்தி" என்னும் நாடகத்தை நவம்பர் மாசம் 16ஆம் தேதி, சென்னை ராயல் தியேடரில் நடித்தனர். மஹாராஷ்டிர பாஷையிலும், கன்னட பாஷையிலும் எழுதியிருந்த இந் நாடகத்தை, மிகவும் கஷ்டப்பட்டு தமிழில் எனது நண்பர் மொழி பெயர்த்து, மிகவும் சிரமம் எடுத்துக்கொண்டு ஒத்திகைகள் நடத்தி, இதை நடத்தி வைத்தார். தானே கதாநாயகனான "விக்ராந்தன்" வேடம் பூண்டு வெகு விமரிசையாக நடித்தார்; இப்பாத்திரத்தை சற்று வேறு விதமாய் நடிக்கவேண்டுமென்று என் அபிப்பிராயமாயிருந்த போதிலும் அவா சபையோரை யெல்லாம் சந்தோஷிக்கச் செய்தனர் என்பதற்கு ஐயமின்று. இந் நாடகம் முதன் முறை நடித்தபோது எங்கள் சபைக்கு ஆயிரத்துச் சில்லரை ரூபாய்க்கு மேல் வசூலாயிற்று. இதை டிசம்பர் மாசம் நாடங்களில் ஒன்றாக மறுபடியும் முக்கோடி ஏகாதசி யன்று ஆடினோம், அப்பொழுதும் ஏராளமாய் ஜனங்கள் வந்தனா.

இவ்வருடத்தின் கடைசியில் கிறிஸ்ட்மஸ் (Christmas) விடுமுறையில் எனது நண்பர் நாகரத்தினம் ஐயர் சேலத்திலிருந்து சென்னைக்கு வர நாங்களிருவரும் இரண்டு மூன்று நாடகங்களில் இங்கு நடித்தோம்.

இவ் வருஷத்திய நிகழ்ச்சிகளில் இன்னும் ஒன்றைத்தான் குறிக்கவேண்டியிருக்கிறது. எங்கள் சபையின் வழக்கப்படி ஏப்ரல் மாதம் ஷேக்ஸ்பியர் கொண்டாட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது. அந்த கொண்டாட்ட தினம் சாயங்காலம் ஆரம்பத்திற்கு ஐந்து நிமிஷம் முன்னாகத்தான், அன்று ஷேக்ஸ்பியர் மஹா நாடக கவியைப்பற்றி உபன்யாசம் செய்ய இசைந்தவர், தான் அவ்விதம் செய்ய ஏதோ காரணத்தினால், முடியாமையை எங்களுக்குச் சொல்லியனுப்பினார். "செல்லுஞ் செல்லாதத்திற்கு செட்டியாரைப்பிடி" என்பது போல், எனது பால்ய நண்பர் வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்கார் அந்த உபன்யாசம் செய்வதற்கு என்னைப் பிடித்தார். நான் சபையின் பெயர் கெடாதபடி, அதற்கிசைந்து, ஷேக்ஸ்பியர் நடனாக நடித்ததைப் பற்றி, ஒரு சிறு உபன்யாசம் செய்யவேண்டி வந்தது. சமயம் வந்த பொழுது சபைக்கு கைகொடுக்க வேண்டியவனாய் இன்னும் வாழ்ந்து வருகிறேன் இறைவன் அருளால்.

---

# 32-ஆம் அத்யாயம்

இனி 1931 ஆம் வருஷத்திய நிகழ்ச்சிகளைப் பற்றி எழுதுகிறேன்.

இவ்வருஷம் அக்டோபர் மாசம் நான் மதுரைக்குப் போயிருந்தேன்; எனது அத்யந்த நண்பர் கே. நாகரத்தினம் ஐயர், சேலத்திலிருந்து அங்கு வந்து சேர்ந்தார். அக்டோபர் மாசம் 3 ஆம் தேதியிலும் 5 ஆம் தேதியிலும் "இரண்டு நண்பர்கள்", "சுபத்திரார்ஜுனா" என்னும் இரண்டு நாடகங்களிலும் நாங்கள் நடித்தோம். மதுரை டிராமாடிக் கிளபில் நாங்களிருவரும் நடித்தது இது நான்காம் முறையாகும். இரண்டு நண்பர்கள் நாடகத்தில் சற்றேறக் குறைய இரண்டு வருடங்களுக்கு முன் ஆடிய ஆக்டர்களே

நடித்தோம்; ஆயினும் இம் முறை நான் சுந்தராதித்யனாக நடித்தது எனக்கு திர்ப்தி கரமாயில்லை; இதற்கு முக்கிய காரணம், எனது உடம்பில் ஒருவித சிரங்கும் கட்டியும் கண்டு அவற்றால் நான் பீடிக்கப்பட்டிருந்ததேயென நம்புகிறேன். வருகிறேன் என்று ஒப்புக்கொண்டபின், வராமற் போவது தவறென எண்ணி, நான் மதுரைக்குப்போய் நடித்தேனே யொழிய, என் தேக சௌகர்யத்தை மாத்திரம் கருதி யிருப்பேனாயின், நான் போயிருக்க மாட்டேன். தினம் எனது நண்பர் டாக்டர் சீதாராமையரிடம் போய் என் கட்டிகளுக்கெல்லாம் சிகிச்சை செய்து கொண்டு, பிறகே இவ்விரண்டு நாடகங்களிலும் நடிக்க வேண்டியவனாயிருந்தேன். எப்படியாவது வாக்கு தவறாதபடி இவ்விரண்டு நாடகங்களிலும் நடித்தாகவேண்டும் என்பதே என் பெருங்கவலையாயிருந்தது. இந்த ஸ்திதியில், மிகவும் கஷ்டமானதான சுந்தராதித்யன் பாத்திரத்தில நான் நன்றாய் நடிக்காதது ஓர் ஆச்சரியமன்று. தேக சிரமம் அதிக மிலலாமல நடிக்கக் கூடிய அர்ஜுனன் பாத்திரத்தை, ஏறக்குறைய திர்ப்திகரமாகவே நடித்து முடித்தேன். இதனால் இதை வாசிக்கும் எனது நண்பர்களுக்கு நான் தெரிவித்துக் கொள்ள விரும்பும் விஷயம் என்ன வென்றால், நாடகமேடையில் பெயர் பெற விரும்பும் இளைய ஆக்டர்கள், கூடுமானவரை நல்ல தேகஸ்திதியிலிருக்கும் போதுதான் நடிக்க வேண்டுமென்பதே; நாடகமாடுவதையே ஜீவனோபாயமாக உடையவர்களைவிட, அமெடூர (amateur) ஆக்டர்களாகிய நாம், இந்த சவுகர்யமுடையவர்களாயிருக்கிறோம்—அவர்கள் தங்கள் பிழைப்பின் பொருட்டு, தேகம் என்ன அசௌக்கியமாயிருந்தபோதிலும் ஆக்டு செய்ய வேண்டியவர்களாயிருக்கிறார்கள், நமக்கு அந்த கட்டாயம் கிடையாது; ஆகவே, முக்கியமான பாத்திரங்களை—அதிலும் கஷ்டமான பாத்திரங்களை—நல்ல தேக ஸ்திதியிலிருக்கும் போதுதான் நாம் நடிக்கவேண்டும்.

இம் முறை நடித்த சுபத்திரார்ஜுனா நாடகமானது சபையோரால் மிகவும் சிலாகிக்கப்பட்டது. ஸ்ரீ கிருஷ்ணனாக நடித்த எனது மதுரை நண்பர் பஞ்சநாத ஐயர், மிகவும் விமரிசையாக நடித்தார்; இப்பாகத்தில் இவருக்கு இணையில்லை யென்பது என்

தீர்மானமான அபிப்பிராயம். மதுபானப் பிரியராகிய பலராமர் பாத்திரமானது மிகவும் ஒழுங்காய் எனது நண்பர் மா. சுப்பிரமணிய ஐயரால் நடிக்கப்பட்டது. எனது நண்பர் டாக்டர் நாராயண ஐயர் மேற்கொண்ட "லம்போதரன்" பாகம் சிறிதாயினும், அதை மிகவும் நன்றாய் நடித்து சபையோரைக் களிக்கச் செய்தார்; ஆயினும் லம்போதரன் என்னும் பெயருக்கிசைய இவருக்கு தொப்பை மாத்திரம் இல்லாமற் போசசுது! மதுரையில் இம்முறை நடத்திய இரண்டு நாடகங்களும், இதற்கு முன் இரண்டு முறை நடத்திய நாடகங்களும், மதுரை மாசி வீதி நாடகக் கொட்டகையில் நடத்தப்பட்டன.

இவ்வருஷம் எங்கள் சுகுண விலாச சபை, முதல் ஐந்தாறு மாதம் கொஞ்சம் நித்திரை போயிற்றென்றே சொல்லவேண்டும். கடைசியில்தான் கொஞ்சம் விழித்துக்கொண்டது. டிசம்பர் மாசம் 19 ஆம் தேதி நான் தமிழில எழுதிய "சகுந்தலை" நாடகமானது ஆடபபட்டது. இந்நாடகமானது 1929 ஆம் வருஷத்தில் என்னால் மொழி பெயாக்கப்பட்டு அச்சிடபபட்டது. இதைபபற்றி எனது நண்பர்களுக்கு சில சமாசாரங்களைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

எனது நாடக மேடை நினைவுகளை ஆதி முதல் வாசித்து கொண்டுவரும் நண்பர்கள், நான் 1891 ஆம் வருஷம் இந் நாடகத்தை, மானியர் வில்லியம்ஸ் (Monier Wllıams) என்பவர் காளிதாசரியற்றிய சம்ஸ்கிருத நாடகத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்ததை, தமிழில மொழி பெயர்க்க யத்தனித்தேன் என்பதை கவனித்திருக்கக் கூடும். அச்சமயம் முதல நான்கு அங்கங்களை மொழி பெயர்த்ததாக எனக்கு ஞாபகம்; ஏதோ சில காரணங்களால் அதைப் பூர்த்தி செய்யாது விட்டேன். அச்சமயம் சம்ஸ்கிருதத்தில் எனக்கு ஒரு எழுத்தும் தெரியாது. பிறகு நான் வக்கீலான பின், சுமார் 1904 ஆம் வருடம், ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூலில் சம்ஸ்கிருத உபாத்தியாயராயிருந்த காலஞ் சென்ற அப்பாசாமி சாஸ்திரியாரை எனது சம்ஸ்கிருத உபாத்தியாயராக ஏற்படுத்தி, காலையில் தினம் கொஞ்சம் கொஞ்சமாக சம்ஸ்கிருத பாஷையைக், கற்க, ஆரம்பித்தேன். என் வீட்டிலிருந்த சிறு

குழந்தைகள் நகைக்கும்படி, சம்ஸ்கிருத எழுத்துக்களை, பலகையில் எழுதிக் கற்க ஆரம்பித்தேன்! என் சம்ஸ்கிருத வாத்தியார், எனக்கு முதல் நாள் சொன்ன ஒரு சம்ஸ்கிருத ஸ்லோகத்தின் தாத்பர்யம் இப்பொழுதும் என் நினைவில் இருக்கிறது. அதாவது, காரியசாதன விஷயத்தில மனிதர்கள் மூவகைபபடுவார்கள்—அதமர்கள், ஒரு காரியத்தை ஆரம்பித்தவுடன், அதன் கஷ்டங்களைக் கண்டு பயந்தவர்களாய், முதலிலேயே கைவிடுவாாகள்; மத்திமர்கள் கொஞ்சதூரம் பிரயதனப்பட்டு, பிறகு அதை முடிக்க அசக்தர்களாய்க் கைவிடுவார்கள்; எவவளவு கஷ்டங்கள் நேரிட்ட போதிலும், அவைகளை ஒரு பொருட்டாகப பாராட்டாமல், அவைகளை வென்று அக்காரியம் சித்திபெறும் வரையில், கைவிடாது நிர்வகிபபவனே உத்தம புருஷனுவான், என்பதே. இதையே என் குருவின் போதனையாகக் கொண்டு, பதினெட்டு வருடம், தினம் கொஞ்சம் கொஞ்சமாக, கஷ்டமான சமஸ்கிருத பாஷையைக் கறறேன். பால பாடங்கள் ஒன்றிரண்டான பின், ஸ்ரீமத் ராமாயணத்தை எடுத்துக்கொண்டு முற்றிலும் படித்தேன்; அன்றியும் அதிலும் பெரிய கிரந்தமான வியாசபாரததத்தையும—இரண்டு பர்வங்கள தவிர மற்றெல்லாவற்றையும் படித்தேன். பழயகாலத்து சாஸ்திரியாராகிய என் சம்ஸ்கிருத உபாத்தியாயர் ஆதியோடந்தமாக அக்கிரந்தத்தைப படிக்கலாகாது என்னும் கொள்கை கொண்டிருந்தவா. அன்றியும் ஹிதோபதேசம, ரகுவம்சம, பர்தருஹரி சதகங்கள, முதலிய கிரந்தங்களையும அவரிடம் படித்தேன்; நான் நாடகங்கள் எழுதுவதறகு உபயோக மாகுமபடி சகுந்தலை, விக்ரமோர்வசி, மாளவிகாக்னி மித்ரம், வேணி சமஹாரம், மிருசசகடி, உத்தர ராம சரித்திரம், பிரபோத சந்திரோதயம, சஙகலப சூரியோதயம் முதலிய நாடகங்களையும் அவரிடம் கறறேன். மேக சந்தேசம், கிராடார் ஜுனியம் முதலிய காவியங்களையும் வாசித்தேன். அவராகத் தனக்கு வயது முதிர்ந்த படியால இனி உங்கள் வீட்டிறகு வந்து பாடம் சொல்ல முடியாது என்று சொல்லுகிற வரையில நான் அவரைக் கைவிடவில்லை; அவர் காலகதியாயின பிறகும், தினம் கால்மணி சாவகாசமாவது ஏதாவது காலையில் சம்ஸ்கிருதம் படித்து வருகிறேன் இப்பொழுதும். தறகாலம் நான் சம்ஸ்கிரு

தத்தில் பாண்டித்ய முடையவன் என்று சொல்லிக்கொள்ள அசக்தனாயிருந்த போதிலும், சம்ஸ்கிருதம் கொஞ்சம் அறிவேன் என்றாவது சொல்லிக்கொள்ளக்கூடும். இவ்வாறு நான்கொஞ்சம் கற்றதினாலும் அடைந்த பலன் மாத்திரம் அதிகம். கிரீக் (Greek) பாஷையறியாத ஆங்கிலக்கவி கீட்ஸ் (Keats) என்பவர் முதன் முறை, கிரீக் பாஷையில ஹோமர் ஆதிகவியொருவர் இயற்றிய சிறந் தகிரந்தமாகிய இலியட் (Iliad) என்பதை சாபமான் (Chapman) என்பவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்ததைப் படித்த பிறகு, அதனால் தனக்குண்டான மனக்கிளர்ச்சியை, ஒரு கவியினால் மிக வும் அழகாய் விவரித்திருக்கின்றார். அதைப்போன்ற மனக்கிளர்ச் சியை, சம்ஸ்கிருதம் கற்று, அதிலுள்ள இதிகாச, புராண, நாடக, காவியங்களில் சிலவற்றைப படித்த பிறகு, நான் கொஞ்சம் அடைந் தேன் என்றே நான் சொல்லவேண்டும். அன்றியும் ஒரு உபன்யா சத்தில நான் கூறியபடி, சம்ஸ்கிருதம் படித்ததினால், தமிழில் எனக குள்ள சிறு பாண்டி தயமும், அன்பும் அதிகமாயிறறு, என்றே நான் நிசசயமாய்க் கூறக் கூடும. இவ்வாறு சம்ஸ்கிருதத்தைக் கற்று பயனடையும்படி என்னைத் தூண்டியவர் எனது பால்ய நண்பரான வி.வி. ஸ்ரீனிவாச ஐயங்காரே. நான் இவ்வயதில், எனது கோபத்தை ஏறக்குறைய எல்லாவித ததிலும் அடக்கியபோதிலும், தமிழை தூஷிக்கும் சம்ஸ்கிருத வித்வான்களைக் கண்டாலும், அல்லது சம்ஸ் கிருதத்தை தூஷிக்கும தமிழ் விதவான்களைக் கணடாலும், அக கோபமானது அதிகமாக மூள்கிறது நமது தேசத்திலுள்ள மற்ற சசசரவுகளுடன், இந்த "வடகலை", "தென்கலை" சசசரவும் நம்மைப் பாழாக்கவேண்டுமா! இசசசசரவுகளெல்லாம நீங்கி நமது தேசம் ஒருமைப் பட்டாலொழிய, நாம் முன்னேற்றமடைவது என் பது கனவிலும் கனவாம். இவவிரண்டு பாஷைகளையும் பற்றி என் அபிப்பிராயம் என்னவென்றால, இவவிரண்டையும் ஒருவன் தன் தாய் தந்தையரைப்போல போற்றவேண்டுமென்பதே; ஒருவனுக்கு தாய் உயர்ந்தவளா, தந்தை உயர்ந்தவனா, என்று வாதாடுவதில் என்ன பிரயோஜனம்? இவ்விருபாஷைகளில ஒன்றை துவேஷிப் பவன், தன் தாய் தகபபனார்களில ஒருவரை துவேஷிக்கும் பாவத் திற்குள்ளாவான் என்பது என் அபிபபிராயம்.

மேற் சொன்னபடி நான் சம்ஸ்கிருதம் கொஞ்சம் கற்றதற்குக் கைம்மாருக அட்பாஷையிலுள்ள சில முக்கிய நாடகங்களை, தமிழ் உலகம் அறியும்பொருட்டு மொழிபெயர்த்து அச்சிடவேண்டுமென்று தீர்மானித்தே, சாகுந்தலம், விக்ரமோர்வசியம், மாளவிகாக்னிமித்ரம், என்னும் மூன்று சம்ஸ்கிருத நாடகங்களையும் என் சக்திக்கு இசைந்தவாறு மொழி பெயர்த்தேன். இவைகளை நான் அச்சிட்ட பொழுது முக்கியமாக இவைகள் தமிழ் நாடக சபைகளுக்கு உபயோகப்பட வேண்டும் என்னும் எண்ணமுடையவனுயிருந்தது பற்றி, அந்நாடகங்களில் சில காட்சிகளைக் குறைக்கி, சில வர்ணனை சுலோகங்களை (அவைகள் நாம் படிப்பதற்கு மிகவும் அழகாயும் ருசியாயு மிருந்த போதிலும் நடிப்பதற்கு அவசியமானவை யல்லவென்று) மொழி பெயர்க்காது விட்டுள்ளேன். இதற்காக சம்ஸ்கிருத அபிமானிகள் என்னை மன்னிப்பார்களாக.

பரமேஸ்வரன் எனக்கு ஆயுள் இன்னும் கொஞ்சம் கொடுப்பாராயின், உத்தரராம சரித்திரம், மாலதி மாதவம், மிருச்சகடி முதலிய, நாடகங்களையும், தமிழ் நாடக மேடைக்காக, மொழி பெயர்த்து அச்சிடலா மென்றிருக்கிறேன்.

இச்சந்தர்ப்பத்தில், நான் சம்ஸ்கிருத நாடகங்களில் எங்கள் சபையில் நடித்தது எனக்கு நினைவிற்கு வருகிறது. நான் ஏதோ கொஞ்சம் சம்ஸ்கிருதம் கற்றுவருகிறேன் என்று அறிந்த காலஞ் சென்ற எனது நண்பரும் சம்ஸ்கிருத பாஷையில் மிகவும் அபிமானமும் பாண்டித்யமு முடையவராகிய, டி. எல். நாராயண சாஸ்திரியார், பி.ஏ., பி.எல்., தான் சம்ஸ்கிருத கண்டக்டரான பிறகு, என்னையும் சம்ஸ்கிருதத்தில் நடிக்கும்படி வற்புறுத்தி, வேணி சம்ஹார நாடகத்தில் எனக்கு "சார்வாகன்" என்னும் பாத்திரத்தை முதல் முதல் கொடுத்தார். "அரை துட்டில் கலியாணமாம், அதில் கொஞ்சம் பாணவேடிக்கையாம்," என்னும் பழமொழிக்கிசைய அந்த சிறு பாகத்தில், என்னை ஒரு ஸ்லோகமும் பாடும்படிச் செய்தார்! ஆயினும், இந்த பாகத்தை நடிப்பதில் நான் ஒரு கஷ்டப்பட்டேன்! (அக்கஷ்டம் இன்னும் என்னை விட்டு அகலவில்லை). அதாவது சம்ஸ்கிருத பதங்களை சரியாக உச்சரிக்கக் கூடாமையே! சம்ஸ்கிருதத்திலிருப்பது போல், ஒற்றெழுத்துக்கள் தமிழில் இல்லை

தமிழ் க என்னும் ஒரு அட்சரத்திற்கு சமஸ்கிருதத்தில் நான்கு இருக்கின்றன. அப்படியே த, ப, ச, முதலிய எழுத்துகளுக்கும்; கேவலம் தமிழ் மாத்திரம் கற்றவன், இவ்வெழுத்துப் பேதங்களை சரியாக உச்சரிப்பது கொஞ்சம் கடினம். பிறந்தது முதல் தமிழில் பழகியபடியால், இக்கஷ்டம் எனக்கும் இருந்தது. அன்றியும் ஒரு உபாத்தியாயரை வைத்துக்கொண்டு நான் சம்ஸ்கிருதம கற்க ஆரம்பித்தபொழுது, முதலில் அவர் ஒரு புஸ்தகத்தைவைத்துக்கொண்டு படித்து அர்த்தம சொல்லிக்கொண்டே போவார் நான் மற்றொரு புஸ்தகத்தை வைத்துக்கொண்டு அர்த்தம் தெரிந்துகொண்டே போவேன். இதனால சம்ஸ்கிருத பதங்களை சரியாக உச்சரிக்கும் திறம் எனக்கு இல்லாமற போயிற்று. நான் சம்ஸ்கிருத நாடகங்களில நடிக்கவேண்டிய பிரயத்னபபட்ட போது, இக்குறை வெளியாயிற்று "செய்வன திருத்தச் செய்யவேண்டும்" என்று கருதினவனாய், இக்குறையைக் கூடுமானவரையில் நீக்கவேண்டி, நானாக உரக்கபபடிக்க ஆரம்பித்தேன்; அப்படி படிக்கும்போது என் உசசரிபபில் ஏதாவது குற்றம் வந்தால அதை என் உபாத்தியாயர் சரிப்படுத்திக்கொண்டு வருவார; நாளடைவில் இக் குற்றம் பெரிதும் நீங்கிய போதிலும் இபபொழுதும் சம்ஸ்கிருதத்தில் ஏதாவது நடிப்பதென்றால், எங்கு தவறாகச உசசரிக்கின்றேனோ, என்கிற பயம் இன்னும் முற்றிலும நீங்கவில்லை. இக் குற்றத்தை நீக்கிக் கொள்ளும் பொருட்டும், அன்றியும் சம்ஸ்கிருத பாஷையில் எனக்குள்ள ஆர்வத்தினாலும், எங்கள சபையில் சம்ஸ்கிருத நாடகங்கள் ஏதாவது ஆடும்பொழுதெல்லாம சம்ஸ்கிருத கண்டக்டர்களை நானாகக்கேட்டு, ஏதாவது சிறு பாகங்களை எடுத்துக் கொண்டு நடித்து வருகிறேன், இன்றளவும்.

இதுபோன்ற காரணத்தினால், எங்கள் சபையில் தெலுங்கு கன்னட நாடகங்கள் ஆடும்போதும் தெலுங்கு கன்னட கண்டக்டர்கள் ஏதாவது சிறு பாகங்கள் கொடுத்தால் அவைகளையும் எடுத்துக்கொண்டு, மேடையின் மீது ஆடி வருகிறேன்.

இவ்வருஷத்தின கடைசியில டிசம்பர் மாதத்திய நாடகங்களில், எனது அந்தரங்க நண்பராகிய நாகரத்தினம் ஐயரும் நானும்

"வள்ளி மணம்" என்னும் நாடகத்தில் முக்கிய பாகங்களை எடுத்துக்கொண்டு நடித்தோம்.

# 33-ஆவது அத்யாயம்

இனி 1932 ஆம் வருஷத்திய நிகழ்ச்சிகளைப் பற்றி எழுதுகிறேன். இவ்வருஷ ஆரம்பத்தில் ஜனவரி மாசம் இரண்டாம் தேதி எங்கள் சபையார் "அமலாதித்யன்" (Hamlet) நாடகத்தை ஆடவேண்டுமென்று தீர்மானித்தனர். இதற்கு முக்கிய காரணம் எனது நண்பராகிய திவான் பஹதூர் ஜெ. வெங்கட நாராயண நாயுடுகாருவின் தூண்டுதலேயாம். இது நடிப்பதற்கு மிகவும் கஷ்டமான நாடகம் என்பதை முன்பே தெரிவித்திருக்கிறேன். எனக்கு வயது மேலிட்டபடியால் இனி இப்படிப்பட்ட கஷ்டமான நாடகங்களில் நடிப்பதில்லை யென்று தீர்மானித்திருந்தேன். ஆயினும் எனது நண்பரும் சபையின் காரியங்களில் இன்னும் மிகவும் ஊக்கமுடன் உழைத்துவரும் நாயுடுகாரு வேண்டுகோளை மறுக்கலாகாது என்று இசைந்தேன்.

ஆயினும் இந்நாடகத்தில் முன்புபோல் நடிக்க முடியுமோ என்னவோ என்னும் சந்தேகம் மாத்திரம் என்னை விட்டகலவில்லை. நாடக ஆரம்பத்திற்கு முன் எனக்கு அருகிலிருந்து வர்ணம் தீட்டி வைத்த எனது பழைய நண்பராகிய தாமோதர முதலியாரிடம், "நீங்கள் அருகிலிருந்து இந்நாடகத்தைப் பார்த்து, கடுகு இறந்து போனாலும், காரமாவது கொஞ்சமிருக்கிறதா, என்று பார்த்துச் சொல்லுங்கள்" என்று கேட்டிருந்தேன். அவர் மறுநாள் என்னைப் பார்த்து "கடுகு இன்னும் சாகவே யில்லை!" என்று பதில் உரைத்தார்.

இவ்வருஷம் மார்ச்சு மாசம் 14 ஆம் தேதி எங்கள் சபையின் இங்கிலீஷ் கண்டக்டர், ஷேக்ஸ்பியர் மஹா நாடக கவியின் "ஜூலியஸ் சீசர்" என்னும் நாடகத்தை வைத்துக்கொண்டார்; அதில் நான் ஒரு சிறுபாகமாகிய காஸ்கா (Casca) என்பதை நடித்தேன். என்னை இந்நாடகத்தில் இதனினும் பெரிய பாத்திரத்தை எடுத்துக்

கொள்ளும்படி கேட்ட போதிலும் அப்படிச் செய்ய அசக்தனாயிருந்தேன். இதற்கு முக்கியகாரணம், தற்காலம், எனக்கு வயது அதிகமாய் விட்டபடியால் புதிய பாகங்களைக் குருட்டுபாடம் செய்வது மிகவும் கஷ்டமாயிருக்கிறது; தமிழிலாவது அப்படிச் செய்வது அதிக கஷ்டமாயில்லை, மற்ற பாஷைகளில் அப்படிச் செய்வது மிகவும் சிரமமாயிருக்கிறது. நான் இதற்கு முன்பாக எங்கள் சபையில் ஆங்கிலத்தில் சில பாத்திரங்களைத் தான் நடித்திருக்கிறேன். அவற்றுள் நான் கொஞ்சம் பெயர் பெற்றது ஷேக்ஸ்பியர் மஹா நாடக கவியின் "ஒதல்லோ" என்னும் நாடகத்தில் ஈயாகோ (Iago) என்னும் பாத்திரத்தில்; நான் இப்பாத்திரத்தை இரண்டு மூன்று முறை, நடித்திருக்கிறேன். ஒரு முறை நடித்தபொழுது உலகத்தைச் சுற்றிப் பிரயாணம் செய்து வந்த (Globe trotter) ஒரு ஆங்கில சீமான, அச்சமயம் அகஸ்மாத்தாய் சென்னைக்கு வந்திருந்தவர், விக்டோரியா பப்ளிக் ஹாலில் நானிதை நடித்ததைப் பார்த்து "இந்த ஆக்டர், இங்கிலாந்தில் இருப்பானாயின் நலல பணம் சம்பாதிக்கக்கூடும்" என்று தெரிவித்ததாக எனது நண்பர்கள் எனக்குக் கூறினர். சீமைக்குப்போகவேண்டு மென்று மாத்திரம் எனக்கு அநேக வருஷங்களாக ஆவல் உண்டு, ஆயினும் அங்கு போய் நடித்துப பெயர் பெறவேண்டு மெனறல்ல, (அது அசாத்தியம் என்பது நிசசயம்), அங்கு போய்ச சிறந்த ஆக்டர்கள் நடிபபதைக் கண்டு, இக்கலையில் இன்னும் தேர்ச்சியடைய வேண்டுமென்றே. இதை வாசிக்கும் என் இளைய நண்பர்கள் என்னைப் பார்த்து நகைக்ககூடும். அபபடிச செய்பவர்களுக்கு அடியில் வரும் கதையைத் தெரிவிகக விரும்புகிறேன். இதாலி (Italy) தேசத்தில், மைகெல் ஆங்கிலோ (Michael Angelo) என்னும் உலகம் புகழ்கிற சில்ப சாஸ்திரி ஒருவர் இருந்தார்; அவர் தனது எண்பத்தோராம் வயதில், (அதற்கு மேறபட்ட வயதிலோ எனக்கு நன்றாய் ஞாபகமில்லை), ஒரு நாள் ரோம் (Rome) நகரத்திலுள்ள பழய கட்டடமான கொலிசியம் (Coliseium) என்பதைச சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தாராம், இதைக்கண்ட வாலிபன் ஒருவன் "ஓய்! கிழவனாரே! இங்கு என்ன செய்கிறீர்?" என்று வினவ, அதற்கு அவர் "அப்பா, நான் சிற்ப சாஸ்திரம் கற்கிறேன்"

என்று விடை பகர்ந்தனராம். நான் இன்னும் அந்த வயதுக்கு வர பல வருடங்கள் கழியவேண்டும்.

நானிதுவரையில் எழுதி அச்சிட்டுள்ள நாடகங்களுள் இந் நாடகமேடை நினைவுகளில் குறிப்பிடாத நாடகங்கள் இரண்டாம்— அவை "சந்திரஹரி", "காளப்பன் கள்ளத்தனம்" என்பவை.

முதலிற் கூறிய "சந்திரஹரி" என்பது ஆங்கிலத்தில் பர்லெஸ்க் (Burlesque) என்னும் நாடகப் பிரிவினைச் சேர்ந்ததாம். இதை 1923 ஆம் வருஷம் எனதாருயிர் நண்பர் ரங்கவடிவேலு இறந்ததும், அத்துயரத்தை சற்று மறந்திருக்கும் வண்ணம் என் மனதிற்கு ஏதாவது வேலை கொடுக்க வேண்டி, எழுதி முடித்தேன். அவ்வருஷம் டிசம்பர் மாசம் அச்சிட்டேன். இம்மாதிரியான நாடகம் தமிழிலும் கிடையாது, சம்ஸ்கிருதத்திலும் கிடையாது ; பர்லெஸ்க் என்பது ஏதாவது ஒரு பிரபலமான கதையை எடுத்துக் கொண்டு, அதிலுள்ள சந்தர்ப்பங்களுக்கு முற்றிலும் மாறாக, வேறு சந்தர்ப்பங்களை நகைப்புண்டாக்கும்படி கற்பனை செய்து கதையைப் பூர்த்திசெய்வதாம். மேலநாட்டார் இம்மாதிரியான நாடகங்களும் கதைகளும் பல இயற்றி யிருக்கின்றனர், தமிழ் நாடக மேடைக்கு அதைப் போன்ற ஒரு உதாரணம் இருக்க வேண்டுமென்று கருதினவனாய் இச்சந்திரஹரியை எழுதினேன். இதற்கு முதல் நூல் ஹரிச்சந்திரன் கதையாகும்; அம் மன்னன் சத்ய விரதன், என்ன இடுக்கண் நேர்ந்தபோதிலும் சத்தியம் தவறாதவன் ; இந்நாடகத்தின் கதா நாயகனான சந்திரஹரி, மறவநாட்டு மன்னன் ; என்ன கஷ்டம் நேரிடுவதாயினும் நிஜத்தைப் பேசாதவன் ! இதை வாசிக்கும் நண்பர்கள் சற்று ஆலோசித்துப் பார்ப்பார்களாயின் எப்பொழுதும் சத்தியமே பேசுவதை விட, எப்பொழுதும் அசத்தியமே பேசுவது மிகவும் கடினம் என்பதைக் கண்டறிவார்கள். கதையின் மாறுதலுக்கிணங்க, பெயர்களையும் தலை கீழாக மாற்றி யுள்ளேன் ; ஹரிச்சந்திரன் என்கிற பெயரைமாற்றி சந்திரஹரி என்றாக்கினேன், சந்திரமதி என்பதை மாற்றி மதிசந்திரை என்று பெயர் வைத்தேன், விஸ்வாமித்திரன் என்பது இவ்வண்ணமே மித்ராவசு என்றாகிறது, வசிஷ்டர், சிஷ்டவாசியாகிறார், மற்றப்பெயர்களுமிப்படியே.

இதனால் ஹரிச்சந்திரன் கதையை ஹேளனம் செய்தபடி யன்று, அக்கதையானது நமது இந்தியா தேசத்திற்கே அள்ளக்குறையாத ஓர் பெருநிதியாம்; "பர்லெஸ்க்" என்கிற நாடகப்பிரிவின்படி இதை இவ்வாறு எழுதியதேயொழிய வேறன்று.

இந்நாடகத்தை எழுதுவதில் நான் அதிக சிரமப்பட்டேன். இதை எனது நண்பர்கள் வாசித்துப் பார்ப்பார்களாயின் அக்கஷ்டம் அவர்களுக்குப் புலப்படும். இந்நாடகம் மற்றவர்களால் இது வரை இரண்டொரு முறை ஆடப்பட்டபோதிலும், எங்கள் சபையாரால் இதுவரையில ஆடப்படவில்லை.

"காளப்பன் கள்ளத்தனம்" என்னும் மற்றொரு நாடகம், 1931 ஆம் வருஷம் எழுதி அச்சிடப்பட்டது என்னால். அவ்வருஷம் நான் மங்களூருக்குப் போயிருந்தபொழுது, அங்கே ஆங்கிலத்தில் ஒரு சபையாா இக் கதையை நடித்ததைக் கண்டேன். இதைத் தமிழில் எழுதினால் மிகவும் நன்றாயிருக்குமென என் மனதிற்பட, சென்னைக்கு வந்தவுடன், அக்கதையைத் தமிழில் மொழி பெயர்த்து நாடகமாக எழுதினேன். இதன் மூல நாடகம், மாலியர் என்னும் பிரான்சு தேசத்து நாடகக் கவியால் பிரெஞ்சு பாஷையில் எழுதப்பட்டது. இங்கிலாந்து தேசத்தில் எப்படி ஷேக்ஸ்பியர் மஹா நாடகக் கவி கொண்டாடப்படுகிறாரோ, அப்படியே பிரான்சு தேசத்தில் மாலியர் கொண்டாபபடுகிறார். இவர் எழுதியுள்ள பல பிரஹசனங்கள் (Farces) லோகப் பிரசித்தி பெற்றவை. இவரது பிரஹசனங்களை ஆடப்பார்க்கும்பொழுதுதான் அவைகளின் சுவை நன்றாய் நமது மனதில் உதிக்கும்; படிக்கும் பொழுது அதன் ருசிமுற்றிலும் விளங்குவதில்லை; என் அனுபவமும் அபிப்பிராயமும் அப்படியே. இந்நாடகமாவது இதுவரையில் நானறிந்த வரையில் ஒருவராலும் ஆடப்படவில்லை.

இவ்வருஷம் ஈஸ்டர் (Easter) விடுமுறையில் எனது அத்யந்த நண்பர் நாகரத்தினம் ஐயரும் நானும் மறுபடியும் மதுரை டிராமாடிக் கிளப்பாரால், மதுரைக்கு வரவழைக்கப்பட்டோம். அங்கு "சத்ருஜித்", "லீலாவதி-சுலோசனா" என்னும் இரண்டு நாடகங்களில் இருவரும் முக்கிய பாகங்களை எடுத்துக்கொண்டு நடித்

தோம். முதலிற்கண்ட "சத்ருஜித்" நாடகம் நான் இதற்கு முன் 34 வருடங்களுக்கு முன் சென்னையில் ஆடியது. யாது காரணத்தினலோ எனதாருயிர் நண்பர் ரங்கவடிவேலு அதில் ஆட மறுபடியும் இச்சைகொள்ளவில்லை. அக்காரணம் பற்றி அந்நாடகத்தை மறுபடியும் ஆடும்படி எங்கள் சபையில் நான் பிரேரேபிக்க வில்லை. மதுரை டிராமாடிக் கிளப்பார், இதை ஆடவேண்டுமென்று தீர்மானித்த பொழுது, இதை ஒரு புதிய நாடகமாகப் பாவித்து நான் கற்க வேண்டியவனுயினேன். முப்பத்து நானகு வருடங்களுக்கு முன் இதில் நடித்தது எனக்குக் கொஞ்சமும் ஞாபகமில்லாமற் போயிற்று. நான் சிரமப்பட்டு சத்ருஜித் பாத்திரத்தைக் கறக வேண்டி வந்ததன்றி, இதற்காகச் சேலத்துக்குப் போய் எனது அத்யந்த நண்பர் நாகரத்தினம் ஐயருக்கு, "சதீமணி" பாத்திரத்தைக் கற்பிக்க வேண்டி வந்தது. இந்த நாடகம் ஒரு பெரிய நாடகம், அன்றியும் நடிப்பதும் கஷ்டம், ஆகவே, நாடக தினத்திற்குப பதினைந்து தினத்திற்கு முன்பாக மதுரைக்குப போய், ஒத்திகைகள் நடத்தவேண்டி வந்தது. ஆயினும் நான் எடுத்துக்கொண்ட சிரமத்திற்குப் பரிஹாரமாக எனது மதுரை நண்பர்கள் மிகவும் நன்ருய் நடித்து, கிளப்புக்குப் பெயரும், எனக்கு மகிழ்ச்சியும் கொடுத்தனர். முக்கியமாக எனது நண்பர், மா. சுப்பிரமணிய ஐயா கஜவதனனுக மிகவும் நன்ருய் நடித்தார். அன்றியும் விலாசினி வேடம் பூண்ட, மதுரை ஆட்வகேட்டும், டிராமாடிக் கிளபபில ஓர் அங்கத்தினருமாகிய, நாராயணசாமி சாஸ்திரியார் பி.ஏ.,பி.எல்., அவர்களின் மைத்துனியாகிய, சுமார் ஒன்பது வயதுடைய ஒரு சிறு பெண் மிகவும் நன்ருய் நடித்து, சபையோரை மகிழச செய்தது; இசசிறு பெண் சில இடங்களில் நடித்தது, தேர்ந்தபெரிய ஆக்டாகளும் அவ்வளவு அழகாய் நடித்திருக்க மாட்டாாகள் என்று என்னை நினைககச செய்தது; இவ்வளவு புத்தி சாதுர்யமான பெண் இன்னும் இரண்டொரு வருடத்தில் பெரியவளாகிக் கலியாணமாகி நாடக மேடையை வெளியிலிருந்து தானே பார்க்கவேண்டும் என்று, நாடக முடிந்ததும் வியசனப்பட்டேன். இக்குழந்தைக்கு மீனுட்சி சுந்தரேஸ்வராள், பூர்ணயுசும், சகல ஐஸ்வாயத்துடன், இவளது கலைஞானத்தை மெசசும்படியான தக்க கணவனையும கொடுபபாாகளாக! என்று பிரார்த்திக்கிறேன்.

இச்சந்தர்ப்பத்தில் நமது தென் இந்தியா நாடக மேடை மீது ஸ்திரீகள் நடிப்பதைப்பற்றி என் அபிப்பிராயத்தை எனது நண்பர்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். இதைப்பற்றி எனது அபிப்பிராயம் என்னவென்று பல நண்பர்கள் பன்முறை கேட்டிருக்கிறபடியால், சற்று விவரமாய் எழுத வேண்டியவனாயிருக்கிறேன்.

சில வருடங்களுக்கு முன் சென்னை சர்வகலாசாலையர் (University) உத்தரவின்படி, பச்சையப்பன் கல்லூரியில், "நாடகத் தமிழ்" என்பதைப் பற்றி மூன்று நாள் உபன்யாசம் செய்தேன்; இதைப் புஸ்தகமாக அச்சிட்டிருக்கிறேன். இது சம்பந்தமாக பூர்வகாலத்தில் தமிழ் நாடகங்களிலிருந்த ஸ்திதியைப் பற்றி ஆராய்ச்சி செய்ய வேண்டி வந்தது. அந்த ஆராய்ச்சியை யெல்லாம் இங்கு நான் எழுதுவது மிகையாகும், ஆயினும் அந்த ஆராய்ச்சியில் நாடகமேடைக்கும் ஸ்திரீகளுக்கும் உண்டாயிருந்த சம்பந்தத்தை மாத்திரம் இங்கு சுருக்கி எழுதுகிறேன்.

இன்றைக்கு சுமார் 1800 வருடங்களுக்குமுன் தென் இந்தியாவில், தமிழ் நாடகங்கள் ஆடப்பட்டன வென்பதற்குச் சந்தேகமில்லை. அன்றியும் அவற்றுள் பெரும்பாலும் ஸ்திரீகள் நடித்தனர் என்பதும் சிலப்பதிகாரம் முதலிய நூல்களினால் விளங்குகிறது. அக்காலத்தில் நாடகங்களில் ஆடிய ஸ்திரீகள் விலைமாதராயிருந்தனரென்பதும் நன்கு விளங்குகிறது. தமிழ் நாட்டில் அரசகுல ஸ்திரீகளும் உயர்குல ஸ்திரீகளும், வடபிரதேசத்திலிருந்தது போல் நாட்டியம் அல்லது நாடகமாடக் கற்றனா என்பது கொஞ்சமேனும் விளங்கவில்லை. தமிழ் நாடகமானது க்ஷீணதிசையையடைந்ததற்கு ஒரு முக்கியகாரணம் இதுவாயிருக்கலாமென்று தோன்றுகிறது; பிறகு சரித்திர காலத்துக்கு வருங்கால "ராஜராஜேஸ்வரி" நாடகம் முதலியன ஆடியவர்கள் பெரும்பாலும் ஆண்மக்கள் என்று அறிகிறோம். அக்காலத்தில் சில கோயில்களில் தாசிகள் திருவிழாவின் போது நாடகங்களாடியதாக அறிகிறோம். (இவ்வழக்கம் சில கோயில்களில் இன்னும் உண்டு) தற்கால்த்து நிலையைக் கருதுங்கால் சுமார் 50 வருடங்களுக்கு முன் தென்இந்தியாவில் நாடக மாடினவர்கள் பெரும்பாலும் ஆண்மக்களாகவே இருந்தனர். ஏகதேசமாக டம்பாச்சாரி விலாசம் முதலிய சில நாடகங்களில், கணிகையர் வேடம்

பூண்டு நடித்ததுமுண்டு. ஸ்திரீகளாக நாடகம் நடித்தது முதல் முதல், நானறிந்தவரை பாலாமணி கம்பெனியில் தான். மேற் குறித்தபடி நாடகமேடை ஏறிய ஸ்திரீகளெல்லாம் பெரும்பாலும் கணிகையராக யிருந்தபடியால், நாடகம் பார்ப்பதற்கே அக்காலம் உயர்குல ஸ்திரீகள் போவது இழிவாகக் கருதப்பட்டது, அப்படியிருக்கவே ஸ்திரீகள் நாடகமேடை ஏறுவதென்பது கன விலும் கருதப்படாத விஷயமாயிருந்தது. சுமார் ஐம்பது வருடங் களுக்கு, முன் தமிழ் நாடக மேடையின் நிலையைக் கருதுங்கால், ஒருவாறு அதனை, எலிஜபெத் (Elizabeth) ராணியின் காலத்தில் இங்கிலாந்தில நாடக மேடையிருந்த ஸ்திதிக்கு ஒப்பிடலாம்—இரண்டிலும் ஏறக்குறைய எல்லா ஸ்திரீபாகங்களும், அழகிய ஆண்பிள்ளைகளால் எடுத்துக்கொள்ளப்பட்டன. தற்காலம் தமிழ் நாடக மேடையிருக்கும் ஸ்திதியை இரண்டாவது சார்லெஸ் (Charles II) காலத்தில் இங்கிலாந்திலிருந்த நாடகமேடையுடன் ஒப்பிடலாம்—இரண்டிலும் மேடையின் மீது தோன்றும் ஸ்திரீ களில பெரும்பாலார் விலைமாதர்களாகவே யிருக்கின்றனர். சென்ற இரண்டொரு வருடங்களாகத்தான் குல ஸ்திரீகள் தங்கள் கண வருடனே அல்லது நெருங்கிய பந்துக்களுடனே நாடகமேடை ஏற ஆரம்பித்திருக்கின்றனர். இதைப்பற்றி என் அபிப்பிராயம் என்னவென்றால், மேற்கத்திய நாகரீகமானது இங்குப் பரவப் பரவ கற்றறிந்த குல ஸ்திரீகளும் விரைவில தமிழ் நாடக மேடைமீது ஆட ஆரம்பிப்பார்கள் என்பது நிச்சயம். ஆயினும் ஐரோப்பிய ஸ்திரீகளைப்போல் கல்வி கற்று ஆண்மக்களுடன் சமானமாகக் குலவும் வழக்கம் நமது நாட்டில பரவும் வரையில், நமது குல ஸ்திரீகள் நாடகமேடை யேறுவது அவ்வளவு உசிதமல்ல வென் பது என் அபிப்பிராயம்.

இவ்விஷயத்தைப்பற்றிக் கருதுங்கால், சிலர், நமது நாடக மேடையில் ஸ்திரீகளின் பாகம், ஸ்திரீகளே எடுத்துக்கொள்ள வேண்டுமே யொழிய, ஆண்மக்கள் எவ்வளவு அழகு வாய்ந்தவ ராயினும், ஸ்திரீ வேஷம பூண எவ்வளவு பொருத்த முள்ளவர்களா யிருந்தபோதிலும், ஸ்திரீ வேடம் புனைவது தகுதியல்ல, என்று எண்ணுகிறார்கள். அவ்வாறு அவர்கள் எண்ணுவது அவ்வளவு

உசிதமல்லவென்பது என் கொள்கை. கள்ளனைப் போல் ஒரு உயர்குலத்தான் வேஷம் பூண்டு நடிக்கிறான் என்றால், எல்லோரும் பார்க்கப்போகிறார்கள், சந்தோஷ மடைகிறார்கள்; இதைவிட்டு ஒரு கள்ளனையே அப்பாத்திரமாக நடிக்கச் செய்தால், மேலாகுமோ? எனது நண்பர் பி. வி. ராமானுஜ செட்டியார், பிரதாப ருத்ரீயம் என்னும் நாடகத்தில் அசல வண்ணானைப் போல் நடிக்கிறது எல்லோ ராலும் புகழப்படுகிறது; அதைவிட்டு வாஸ்தவமான வண்ணானையே அப்பாத்திரத்தை நடிக்கும்படி செய்தால் என்ன பெருமையாகும்? அம்மாதிரியாக அசல் ஒரு பெண் மணியைப்போல் ஒரு ஆடவன் வேடம் பூண்டு நடிப்பதும் மெச்சத் தக்கதாம் என்பது என் கொள்கை. வேடம் தரித்து நடிக்கவேண்டிய நாடகக் கலையில் ஆட வன் ஸ்திரீ வேஷம் பூணுவது மெச்சத் தக்கதாம் என்பது என் அபிப்பிராயம்.



# 34-ஆவது அத்தியாயம்.



இனி 1933 ஆம் வருஷம் முதல் 1937 ஆம் வருஷம் முடிவு வரையில் நடந்தேறிய விஷயங்களைப் பற்றிக் கூறி இவ்வத்தியாயத் தையும் இந்நாடகமேடை நினைவுகளையும் முடிக்கிறேன். கடந்த ஐந்து வருடத்திய சங்கதிகளைபபற்றி எழுதும்பொழுது எனக்குண் டான ஒரு கஷ்டத்தை இங்கு எழுதுகிறேன். "கடலைக் கடக்கக் கஷ்டப்படவில்லையாம், ஒரு சிறு வாய்க்காலைத் தாண்ட கஷ்டப் பட்டானும்" என்னும் பழமொழிக்கு இசைந்தபடி, சென்ற நாற் பத்திரண்டு வருடங்களுக்குமுன் நடந்த சமாசாரங்களெல்லாம் என் நினைவிற்கு சுலபமாய் வந்தன, இபபொழுது கடந்த ஐந்து வருடங்களில் நடந்த சமாசாரங்களெல்லாம் என் நினைவிற்கு சுலப மாக வரவில்லை! அவைகளைக் குறிப்பிட பல காகிதங்களைப் பரிசோ தித்து எழுதவேண்டியதாயிருந்தது! இதற்கு முக்கிய காரணம் எனக்கு வயது மேலிட்டு ஞாபக சக்தி குறைந்ததேயாம் போலும். தன் முதுமையில் "மறதி என்னும் கள்ளன் கொள்ளை கொண் டனன்," என்று ஒரு தமிழ்ப புலவர் கூறியது எனக்கு இத்தருணம் ஞாபகத்திற்கு வருகிறது.

1933 ஆம் வருஷத்தின் ஆரம்பத்தில், இதுவரையில் எங்கள் சபையில் புகாத ஒரு கெட்ட விஷயம் புகுந்தது; அதாவது பிராம்மணர் சூத்திரர் என்னும் கட்சியே. இக்கெடுதி புகுந்ததற்குக் காரணம் இருவர். பிராம்மணர் சூத்திரர் என்னும் கட்சியைப்பற்றி பேசவும் கூடாது என்னும் கோட்பாடுடைய நான் இதை பற்றி விவரித்து எழுதுவது நியாயமல்ல. இக்கட்சி உண்டானதால் எங்கள் சபை வர வர, க்ஷீணதிசையை யடைந்து வந்ததென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. சென்ற இரண்டு வருடங்களாகத்தான் சபையின் உடலைவிட்டு இவ்விஷம் கொஞ்சம் கொஞ்சமாக அகன்றுக் கொண்டிருக்கிறதென்று எண்ணுகிறேன்; முற்றிலும் இது இடம் தெரியாது அகன்றாலொழிய எங்கள் சபை முன்பிருந்த ஸ்திதிக்கு வராதென்பது என் நிர்ணயமான அபிப்பிராயம்.

இக்காரணம் பற்றி இவ்வருஷம் சபையில் பொதுக் கூட்டம் கூடியபொழுது, நான் சபையின் நிர்வாக சபையில் ஒரு மெம்பராக நிற்கமாட்டேன் என்று மறுத்தேன். சுகுணவிலாச சபை ஆரம்பமானது முதல இது வரையில் இவ்வருஷம்தான் நிர்வாகசபையில அங்கத்தினனாக நான் இராமற்போனது.

நிர்வாக சபையில் அங்கத்தினனாக நிற்காமற் போன போதிலும், இவ்வருஷம் என்னை எந்த நாடகத்தில் ஆடும்படி கேட்டபோதிலும் நடித்து வந்தேன். இவ்வருஷம் நடத்திய நாடகங்களில் குறிக்கத் தக்கது, எனது பால்ய நண்பர் வி. வி. ஸ்ரீநிவாச ஐயங்கார் எழுதிய "கீதோதயம்" என்னும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய பால்ய லீலைகளைப் பற்றிய நாடகம் ஒன்றே, அதில் அவர் வேண்டுகோளுக்கிணங்கி ஒரு சிறு பாகமாகிய "ஜோஸ்யர்" பாத்திரத்தை எடுத்துக் கொண்டு நடித்தேன். இந்நாடகம் நடித்த பொழுது அதைப்பற்றி விமரிசனம் எழுதிய ஒரு பத்திராதிபர், முக்கிய பாத்திரங்களையெல்லாம் விட்டு விட்டு, நான் நடித்த சிறு பாகத்தை மிகவும் சிலாகித்துக் கூறினர். இதை என் புகழ்ச்சியாக இங்கு நான் எழுதவில்லை; எவ்வளவு சிறிய பாகமாயிருந்தாலும், அதைத் தக்கபடி நடித்தால் எப்படியும் பெயர் எடுக்கலாம் என்பதை இதை

வாசிக்கும் எனது இளைய நண்பர்கள் அறியும் பொருட்டே, எழுதியுள்ளேன்.

இக்கிதோதயம் நாடகாசிரியராகிய எனது நண்பரால் எனக்கு "அர்ப்பணம்" (Dedication) செய்யப்பட்டது. இது வரையிலும், இதற்குப் பின்னும், பல நாடகாசிரியர்கள் தங்கள் நாடகங்களை எனக்கு அர்ப்பணம் செய்திருக்கிறார்கள், இருந்த போதிலும் வி. வி. ஸ்ரீனிவாச ஐயங்கார் எனக்குத் தான் எழுதிய இந்நாடகத்தை அர்ப்பணம் செய்ததையே நான் மிகவும் சிலாகிக்கின்றேன். இதை இங்கு குறிப்பிடுவது தவிர அவருக்கு நான் வேறு கைம்மாறு செய்ய அசக்தனாயிருக்கிறேன்.

"பயன்றூக்கார் செய்த உதவி நயன்றூக்கின்
நன்மை கடலினும் பெரிது"

இவ் வருஷம் எங்கள் சபை ஆயிரத்தாவது நாடகம் நடத்தியது. ஆயினும் அதை கவனிப்பாரில்லாதபடி அந்த ஸ்திதிக்கு எங்கள் சபையை, பிராம்மணன் சூத்திரன் என்னும் பிரிவை சபைக்குட் புகச் செய்தவர்கள், கொண்டு வந்து விட்டனர். சில வருடங்களுக்கு முன் அமெரிக்கா தேசத்தில் ஒரு ஆமெடூர் (amateur) நாடக சபை அறுபதாவது நாடகம் நடத்தினதைப்பற்றி ஒரு மாதப்பத்திரிகையில் மிகவும் கொண்டாடப் பட்டது. எங்கள் சபை ஆயிரம் நாடகம் ஆடி முடித்த போதிலும் அதை கவனிப்பாரில்லாமற் போயிற்று! இதனாலாவது பிராம்மணர் சூத்திரர் என்னும் கட்சிப் பிரிவின் கெடுதியை அனைவரும் அறிந்து இக்கெடுதியிலும் கெடுதியை சபையை விட்டு முற்றிலும் அகற்றுவார்களாக! அன்றியும் இக்கெடுதி நமது தேசத்தை விட்டு அகலவேண்டுமென்பது ஈசனுக்கு என் பிரார்த்தனை! இதைப்பற்றி என் அபிப்பிராயத்தை இன்னும் அதிகமாக அறியவேண்டுமென்று இதை வாசிக்கும் எனது நண்பர்கள் விரும்பின், நான் இவ்வருஷம் எழுதி அச்சிட்ட "பிராம்மணனும் சூத்திரனும்" என்னும் தமிழ் நாடகத்தை வாசித்து அறிந்து கொள்வார்களாக. இந்நாடகம் நான் மிகவும் முயற்சி எடுத்துக்கொண்டு எழுதிய நாடகம். இதை வாசித்த, பிராம்மணன் சூத்திரன் என்

னும் துவேஷ மில்லாத, இரு ஜாதியாரும் என்னைப் புகழ்ந்திருக்கின்றனர்; அத்துவேஷமுள்ள இருதிறத்தாரும் என்னை நிந்தித்திருக்கின்றனர்; ஆயினும் அப்படி என்னை நிந்தித்தவர்களில் ஒருவராவது, நான் எழுதியதில் இது தவறு என்று ஒன்றையும் எடுத்துக் காட்டினாரில்லை. இதையே நான் எழுதிய இந்நாடகத்திற்குப் பெரும் புகழாகக் கொள்கிறேன். இந்நாடகத்தைப்பற்றி இன்னும் ஏதாவது அறிய விரும்பின், எனது நண்பர் ஸ்ரீமான் சத்தியமூர்த்தி ஐயர் இதைப்பற்றி "ஹிந்து" பத்திரிகையில் எழுதிய விமர்சனத்தைப் படிப்பார்களாக.

இந்நாடகமானது எங்கள் சபையோரால் நாளது வரையில் நடிக்கப்படவில்லை. இதற்குக் காரணம் இதை வாசிப்பவர்கள், நான் கூறாமலே, அறிந்து கொள்ளலாம்.

இவ்வருஷம் அவ்விடத்தில் டிஸ்டிரிக்ட் முன்சீபாயிருந்த எஸ். கே. பார்த்தசாரதி ஐயங்கார் பி.ஏ.,பி.எல்., அவர்கள் விருப்பத்தின்படி மன்னார்குடிக்குப் போய், அவர் எழுதிய "நளன்" என்னும் தமிழ் நாடகத்தை ஒத்திகைகள் செய்து நடத்தினேன். இந்நாடகத்தில் முக்கியமாக கவனிக்கவேண்டிய விஷயம் என்னவென்றால், இது தான் தமிழ் நாடக மேடையில் பிரபலமான ஜீவனோபாயமாக நாடகமாடும் நடிகர்களும், (Professional actors) ஆமெடேர்களும் (amateur) ஒருங்கு சேர்ந்து மேடையின் மீது ஒரு நாடகத்தை நடத்தியதாம். கும்பகோண வாசியாகிய, தமிழ் நாடகமேடையில் பெயர்பெற்ற நடிகரான பி. எஸ். வேலு நாயரும் சென்னைவாசியாகிய பெயர்பெற்ற அயன் ஸ்திரீ பாட் நடிகரான அநந்த நாராயண ஐயரும், நளனாகவும் தமயந்தியாகவும் நடித்தனர். நாடகாசிரியராகிய பார்த்தசாரதி ஐயங்கார் ஒரு முக்கியபாகமாகிய பாஹுகனை நடித்தார். தேசீயத் தொழிலுக்காக மிகவும் பாடுபடுபவரும், தமிழ் நாடக மாடுவதில் கீர்த்தி வாய்ந்தவருமான, நடராஜ பிள்ளை அவர்கள், வேடுவனை நடித்தார்; நான் ஒரு ஜோஸ்யனாகவும், பிராம்மணனாகவும் நடித்தேன்; இதர வேடங்கள் எல்லாம் மன்னார்குடியிலிருக்கும் சில வக்கீல்கள் முதலியோர் எடுத்துக்கொண்டனர். ஒரு வாரத்திற்கு முன்பாகவே மன்னார்குடிக்குப்போய் ஒத்திகைகள் நடத்தினேன்.

நாடகத்திற்கு இரண்டு மூன்று நாட்கள் முன்னதாக வேலு நாயரும் அநந்த நாராயண ஐயரும் வந்து சேர்ந்தனர். அன்று சாயங்காலம் நான் அவர்களை நளன் தமயந்தி பிரியும் காட்சியை நடிக்கும்படி கேட்க, அவர்கள் அவ்வாறே செய்தனர். காட்சி முடிந்ததும் நீங்கள் நடித்தது நன்றாகத்தானிருக்கிறது, ஆயினும் இக் காட்சியை இப்படி நடித்தால் இன்னும் நன்றாயிருக்குமென எனக்குத் தோன்றுகிறது" என்று சொல்லி, அக்காட்சியை என் அபிப்பிராயப்படி நடித்துக் காட்டினேன். அதன் பேரில் அவர்களிருவரும், மற்றக் "காட்சிகளை நாளை காலை உங்களிருப்பிடம் வருகிறோம், அங்கு உங்கள் அபிப்பிராயப்படி நடித்துக் காட்டுங்கள்," என்று கேட்டனர்; அதன்படியே மறுநாள் பார்த்தசாரதி ஐயங்கார் வீட்டின் மேல் மாடியில் நடித்துக் காட்டினேன், அவர்களிருவரும் நான் சொன்னதையெல்லாம் அன்புடன் கிரஹித்து நாடகதினம் அவ்வாறே நடித்தனர். ஸ்ரீமான் நாடராஜபிள்ளையும் அவ்வாறே செய்தார். நாடகதினத்தில் வந்திருந்தவர்களெல்லாம் நாடகம் மிகவும் நன்றாய் நடிக்கப்பட்டதென்று புகழ்ந்தனர். இதையே நாடகத்தின் ஒத்திகை நடத்துவதில் எனக்கு கொஞ்சம் திறமையுண்டென பிறர் ஒப்புவதாகக் கொள்கிறேன்.

இந்நாடகத்தினம் சுமார் 900 சில்லரை ரூபாய் வசூலாயது, சிலவு போக, ரூபாய் 500 சில்லரை அங்குள்ள ஒரு சமாஜத்திற்கு பார்த்தசாரதி ஐயங்காரால் நன்கொடையாகக் கொடுக்கப்பட்டது.

1934 ஆம் வருஷம் எங்கள் சபை திருவநந்தபுரம் மஹாராஜா அவர்களால் அழைக்கப்பட்டு திருவநந்தபுரம் போய், சில நாடகங்களாடிற்று; இதன் மூலமாக மஹாராஜா அவர்களும் மஹாராணி சேது பார்வதி அம்மாளும் எங்கள் சபைக்கு பேட்ரன்கள் (Patrons) ஆயினர்.

இவ்வாண்டு நான் கலகத்தாவுக்குப் போய் "சதி-சுலோசனா" என்னும் கதையை தமிழ் பேசும் படமாகத் தயாரித்தேன். இவ்விஷயத்தைப்பற்றியும், மறுவருஷம் பம்பாய்க்குப் போய் "மனோஹரன்" தமிழ் பேசும் படத்தில் நான் புருஷோத்தமனாக நடித்த விஷயமும், இந் நாடகமேடை நினைவுகளில் எழுதுவதற்கில்லை. ஸ்வாமியின் கருணையினால் அவ்விவரங்களையெல்லாம் "பேசும் படக்

காட்சி அனுபவங்கள்" என்று வேறு புஸ்தகத்தில் அச்சிடலா மென்றிருக்கிறேன்.

இந்த சதி-சுலோசனு கதையை பேசும் படக் காட்சிக்குத் தயாரித்தபடி, நாடகமாக இவ்வருஷம் அச்சிட்டேன். அன்றியும் "குறமகள்" "வைகுண்டவைத்தியர்" என்னும் இரண்டு சிறு நாடகங்களை எழுதி இவ்வருடம் வெளியிட்டேன். இவ்விரண்டும் எங்கள் சபையில் பிறகு ஆடப் பட்டன. இவ்வருடம் நான் எழுதிய பெரிய நாடகமாவது "உத்தம பத்தினி" யென்பதாம். இதை நான் இது வரையில் எழுதியுள்ள நாடகங்களில் ஒருசிறந்ததாக மதிக்கிறேன்; இதை ஆடுவது கொஞ்சம் கஷ்டம்; நாடகக்கதை முழுவதும் இரண்டு மணி சாவகாசத்தில் நடக்கிறது; இது கிரீக் நாடகங்களை ஒட்டி இவ்வாறு எழுதியபடியாம், அன்றியும் நடிப்பதற்கும் சரியாக இரண்டு மணிதான் பிடிக்கும். இதை எங்கள் சபையைக்கொண்டு நடத்தவேண்டுமென்று ஏற்பாடு செய்தும், எனது நண்பர் கே. நாகரத்தினம் ஐயர் மறுபடியும் வெளியூருக்கு மாற்றப்பட்ட படியால், தவக்கமாயிருக்கிறது; கூடிய சீக்கிரத்தில், ஈஸ்வரன் கிருபையால், இதில் நடிக்கலாமென்று உத்தேசித்திருக்கிறேன்.

1935 ஆம் வருஷம் நான் நான்கு மாதத்திற்கு மேல் பம்பாய்க்கும் மனோஹரன் பேசும் படக்காட்சிக்காகப் போக வேண்டி வந்த படியால், சபையின் காரியங்களை அதிகமாகக் கவனிக்க முடியாமற் போயிற்று.

1936 ஆம் வருஷம் எங்கள் சபையானது 95000 ரூபாய்க்கு சென்னை மவுண்ட் ரோட்டிலுள்ள "தியாகராஜ கட்டடங்கள்" என்பதை விலைக்கு வாங்கியது; அதில் ஒரு நாடக சாலை கட்ட ஏற்பாடு செய்து கொண்டு வருகிறோம்; அது எப்பொழுது முடியுமென்பது ஈசன் திருவுள்ளத்திற்குத்தான் தெரியும். இவ்வருடம் நான் "நல்ல தங்காள்" என்னும் பழய கதையை புதியமாதிரியில் எழுதி அச்சிட்டேன். உத்தம ஸ்திரீயான நல்லதங்காள் தன் ஏழு மைந்தர்களையும் கிணற்றில் தூக்கிப் போட்டுக் கொலைவதற்கு ஒரு புதிய காரணத்தைக் கற்பித்துள்ளேன். இந்நாடகம் பேசும படக்காட்சிக்குத் தக்கபடி அமைக்கப் பட்டுள்ளது. மேலும் இவ்வருஷம் நாடக மேடையில் தேர்ச்சி பெற விரும்பும் எனது இளைய நண்பர்களுக்கு

என் அனுபவத்தைக் கொண்டும், நான் படித்ததைக் கொண்டும், உபயோகப்படும்படி "நாடக மேடையில் தேர்ச்சி பெறுவதெப்படி?" என்னும் பெயர் கொண்ட ஒரு சிறு புஸ்தகத்தை வெளியிட்டேன்.

1937 ஆம் ஆண்டில் "ஏமாந்த இரண்டு திருடர்கள்" "மாறு வேட விருந்து" அல்லது சபாபதி ஐந்தாம் பாகம்; "சோம்பேறி சகுனம் பார்த்தது" "கண்டவுடன் காதல்", "காவல்காரர்களுக்குக் கட்டளை", "மன்மதன் சோலை" என்னும் ஆறு சிறு நாடகங்களை அச்சிட்டிருக்கிறேன். இவைகள் பெரும்பாலும் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்கு உபயோகப்படுமென எண்ணுகிறேன். மேற்கண்டவற்றுள், மூன்றில் ஸ்திரீ பாத்திரமே யில்லாதபடியால் சிறு பிள்ளைகள் எளிதில் நடிக்கக் கூடுமெனக் கருதியே இவைகளை வெளியிட்டேன். தமிழ், தெலுங்கு, ஆங்கிலம், சமஸ்கிருதம், கன்னடம், மலையாளம், உருது, ஆகிய ஏழு பாஷைகளில் நடித்ததுடன், இவ்வருஷம் நான் ஹிந்தி பாஷை கற்க ஆரம்பித்து, தசராக் கொண்டாட்டத்தில் "ஜா மதத்திய பெண்" என்னும் ஹிந்தி நாடகத்தில் ரோமபுரி அரசனாக நடித்தேன்.

என்னிடமுள்ள குறிப்புகளின்படி நான் இதுவரையில் 529 முறை நாடக மேடையின்மீது ஏறியிருக்கிறேன்; இவற்றுள் நான் வெவ்வேறு நாடக பாத்திரங்களைப் பூண்டது 109 ஆம். நான் இதுவரையில் எழுதி அச்சிட்டுள்ள நாடகங்களின் தொகை 68; இந்நாடகங்கள், என் அனுமதியின்மீது 4070 முறை எங்கள் சபையோர்களாலும் மற்றவர்களாலும் ஆடப்பட்டிருக்கின்றன. என் அனுமதியில்லாது வெளியூர்களில் இவைகள் எத்தனை முறை ஆடப்பட்டனவோ, அது ஈசன் திருவுளத்திற்குத்தான் வெளிச்சம்!

1930-ஆம் வருஷம் எனது நண்பராகிய சுதேசமித்திரன் பத்திராதிபர், எனது நாடகமேடை நினைவுகளைத் தன் பத்திரிகைக்கெழுதியனுப்பும்படி கேட்க, அதற்கிசைந்து அவ்வருடம் ஜூன் மாதம் முதல், வாரந்தோறும் சில வருடங்களாக எழுதி வந்தேன். மூன்று நான்கு வருடங்கள் அவைகளெல்லாம் பிறகு ஐந்து பாகங்களாக அச்சிட்டுள்ளேன். கடைசியாக நாளது வரையிலுள்ள நாடக மேடை நினைவுகளை இந்த ஆறாம் பாகமாக அச்சிட்டிருக்கிறேன்.

1930 இதை எழுத ஆரம்பித்த பொழுது, இவற்றையெல்லாம் எழுதி முடிக்க ஈசன் எனக்கு ஆயுள் அருள்வாராக, என்று பிரார்த்தித்து ஆரம்பம் செய்தேன். அப்பிரார்த்தனைக்கிசைந்து, எனக்கு ஆயுளையும், வேண்டிய ஊக்கத்தையும் தேக பலத்தையும் கொடுத்த, எல்லாம் வல்ல ஈசன் கருணையை போற்றி, இத்துடன் என் நாடக மேடை நினைவுகளை முடிக்கிறேன்.

நாடகமேடை நினைவுகள் முற்றிற்று.